# ஸ்ரீ ராமாநுஜன் - 365,366.







ஆசிரியர் :
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரிய ஸ்வாமி

| | | |
|---|---|---|
| தொகுதி — 31 | காளயுக்தி ஸூ புரட்டாசிமீ ஐப்பசிமீ 10—10—1978 | பகுதி — 5, 6. |


## சதாப்தி கண்ட பெரியோர்களின் பெருமை

முன் தொடர்ச்சி

அன்பர்களே !

நூறு திருநக்ஷத்ரம் நிரம்பிய ஸ்ரீவைஷ்ணவப்பெரியார்களின் பெருமையை வெளியிட்டு வரவேணுமென்கிற உத்தேசத்துடன் தொடங்கியிருப்பது நினைவிருக்கு முங்களுக்கு. அவரவர்களின் ஜாதகம் நம்மிடமில்லாமையால் சதாப்தபூர்த்தியை ஏற்றக்குறைவில்லாமல் நாமறிந்து அறிவிக்க முடியாதன்றோ? நூறு திருநக்ஷத்ரங்களுக்கு நாலைந்து குறைவாயிருக்கலாம். இந்த ஸ்வல்ப ஏற்றத்தாழ்வினால் ப்ரமாதமொன்றுமில்லை.

கோயில் திருமலை பெருமாள் கோயில் திருநாராயணபுரம் ஆழ்வார் திருநகரி வானமாமலை திருக்குறுங்குடி என்னுமிந்தத் திருப்பதிகளில் எழுந்தருளியிருந்த மடாதிபதிகளை அடியேன் பதினைந்தாவது பிராயம் முதலாகவே நன்கறிவேனாத லால் அந்த மடாதிபதி ஜீயர்ஸ்வாமிகளைப்பற்றி அடைவே விஜ்ஞாபிக்கிறேன்.

## - திருவரங்கம் பெரிய கோயில் -

கோயிலுக்கு முதன் முதலாக அடியேன் விடைகொண்டபோது, அவ்விடத்து ஸ்ரீரங்கநாராயண ஜீயர்ஸ்வாமி மடத்தில் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி கஸ்தூரி ஜீயர்ஸ்வாமியென வழங்கப்படும் மஹாஸ்வாமி மடாதிபதியாக எழுந்தருளியிருந்தார். அப்போது அந்த ஸ்வாமி திருமேனி நோவு சாத்திக் கொண்டிருந்தபடியால் ஸன்னிதி கைங்கரியத்தைத் தாமே நிர்வஹிக்க சக்தராக இல்லை. அடியேன் அப்போது இருபது நாள் அந்த மடத்தில் தங்கியிருந்தபடியால் அந்த ஸ்வாமியோடு அதிகமாக வார்த்தையாட நேர்ந்தது. அவர் உபயவேதாந்தத்திலும் ப்ரவீணராயிருந்ததோடு நியாய சாஸ்த்ரமும், அதிகரித்திருந்ததாக அறிந்

தேன். அவருடைய ஸ்தானத்திற்கு வேறொரு ஜீயர் ஸ்வாமியை எழுந்தருளப் பண்ணும் முயற்சி நடந்து கொண்டிருந்தது. அடியேன் அங்கிருந்தபோதே ஸ்ரீமத் அயோத்யா ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியென்று ஸுப்ரஸித்தரா யெழுந்தருளி யிருந்த ஜீயர் ஸ்வாமி இங்கு மடாதிபதியாக வரிக்கப்பட்டார். அந்த ஸ்வாமியைப் பற்றிச் சிறிது விஜ்ஞாபிக்கிறேன்.

## - ஸ்ரீமத் பரமஹம்ஸ அயோத்யா ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி -

இப்பெரியார் காரப்பங்காடு ஜீயர்ஸ்வாமி யென்றும் வழங்கப்பட்டு வந்தார். அடியேன் ஏழெட்டு பிராயத்திலிருக்கும்போது இந்த ஸ்வாமி ப்ரஹ்மசாரியாய் அடியேனுடைய திருத்தகப்பனாரிடம் ஸாஹித்ய பாடங்கள் வாசித்துக்கொண்டிருந்தார். சிலவாண்டுகளுக்கப்பால் வடநாட்டில் எங்கேயாவது சென்று வாழ வேணுமென்று கருதி எந்தவிடம் உசிதமானதென்று திருத்தகப்பனாரைக் கேட்டுக் கொண்டிருந்தார். அக்காலத்தில் ப்ருந்தாவனம் புஷ்கரம் ஸீ தா ரா ம் பா க். கல்யாண் முதலானவிடங்களிலுள்ள ஸன்னிதிகளுக்கு அர்ச்சக பரிசாரகர்களைத் திருத்தகப்பனார் அனுப்பிக் கொண்டிருந்தபடியால் தம்மை ஓரிடத்திற்கு அனுப்பும்படி பிரார்த்தித்து வந்தாரிவர். அப்போது ஸ்ரீமதுபயவே புதுப்பேர். இளையவில்லி ராமாநுஜாசாரியர் ஸ்வாமி ராஜபுதாநுஸம்ஸ்தானத்தில் கோட்புட்லி யென்னுமிடத்தில் வாழ்ந்து வருபவர் தம்முடைய மந்திரத்திற்கு ஒருவரை யனுப்ப வேணுமென்று திருத்தகப்பனார்க்கு எழுதியிருந்தபடியால் காரப்பங்காடு ராமாநுஜாசாரியர் என்னுமிவரை அவ்விடத்திற்கு அனுப்பினார். அந்த இளையவில்லி ஸ்வாமி உபயவேதாந்தக் கடலில் ஆழ மூழ்கின ப்ரபல வித்வான். அவரிடம் சென்று சேர்ந்த இந்த ராமாநுஜாசாரியர் அவரிடத்தில் ஸம்ஸ்க்ருதஜ்ஞானத்தை அபிவிருத்தி செய்துகொண்டார். சிலவாண்டுகள் அவர் திருவடிகளில் வாழ்ந்து வந்தார். அப்போது அயோத்யையில் (கீர்த்திமூர்த்தி) யோகி, பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமியால் ப்ரதிஷ்டாபிதமான ஸன்னிதிக்கு அர்ச்சகர் வேண்டியிருந்தபடியால் இவர் அவ்விடத்திற்கு (இளையவில்லிஸ்வாமியால்) அனுப்பப்பட்டு அங்கே கைங்கர்ய பரராக இருந்து வந்தார். இருக்கையில் ஸம்ந்யாஸாச்ரமம் ஸ்வீகரிக்க வேணுமென்று தோன்றி காஞ்சீபுரம் வந்து சேர்ந்து அடியேனுக்குப் பூர்வாச்ரம மாதாமஹரான ஷஷ்டி ஜீயர் ஸ்வாமி யென்கிற அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி ஸன்னிதியில் ஆச்ரமம் பெற்று மடத்திலேயே ஒரு ஸம்வத்ஸர மெழுந்தருளியிருந்து உபயவேதாந்த க்ரந்த காலக்ஷேபம் செய்து கொண்டிருக்கையில்' ஸ்ரீரங்க நாராயண ஜீயர் மடாதிபதியாக (கஸ்தூரி ஜீயர் ஸ்வாமி ஸ்தானத்திற்கு)வரிக்கப்பட்டார். அக்காலத்தில் மோடர்கார் (Motor Car) வசதி ஏற்பட்டிராமையால் மாட்டு வண்டியிலும் குதிரைவண்டியிலுமாக நாலுநாள்களில் அவ்விடம் வந்து சேர்ந்து திருவத்யயநோத்ஸவத்திலேயே மடாதிபதியாக அபிஷிக்தரானார். இரண்டு மூன்று ஸம்வத்ஸரமே அங்கு எழுந்தருளியிருந்தார். ஸ்வதேசாபிமானத்தினால் மீண்டும் காஞ்சீபுரிக்கே யெழுந்தருளி ஸ்ரீபெரும்பூதூரில் எம்பார் ஜீயர் மடாதிபதியாக நாலைந்து ஸம்வத்ஸர மெழுந்தருளியிருந்து திருநாட்டுக்கெழுந்தருளினார். இந்த ஸ்வாமிக்கு இப்போது நூற்றிருபது திருநக்ஷத்திரம் தேறும். இந்த ஸ்வாமி ஸ்ரீரங்க நாராயண ஜீயர் மடத்தை விட்டு விலகின பிறகு காடந்தேத்தி ஜீயர் ஸ்வாமி யென்பவர் சிலவாண்டுகள் மடாதிபதியாக எழுந்தருளியிருந்தார். அவர்க்குப் பிறகு, காரப்பங்காடு தேசி வரதாசார்யஸ்வாமி சிலவாண்டுகளெழுந்தருளியிருந்தார். அவர்க்குப்பிறகு திருமழிசை ராய்ஜீ ஸ்ரீநிவாஸாசாரியஸ்வாமி சென்னைமாநகரில் சாரிடிகளில் காலக்ஷேபம் ஸாதித்துக் கொண்டிருந்தவர் மடாதிபதியாகஎழுந்தருளியிருந்து சரமகாலத்தில்திருமேனிபாங்கில்லாமல்

திருமழிசைக்கே யெழுந்தருளித் திருநாடலங்கரித்தார். இந்த ஸ்வாமிக்குப் பிறகு திருநாராயணபுரம் ஸ்ரீமதுபயவே. திருமலை அனந்தாண் பிள்ளை கோவிந்தப்பங்கார் ஸ்வாமி (சென்னை சாரிடிகளில் காலக்ஷேபம் ஸாதித்துக் கொண்டிருந்தவர்) இங்கு மடாதிபதியாக எழுந்தருளி நாலைந்து ஸம்வத்ஸரம் கைங்கரியம் நிர்வஹித்தருளினர். இந்த ஸ்வாமி திருநாட்டுக்கெழுந்தருளின பிறகு ஆழ்வார் திருநகரியில் உத்தமாச்ரமியாக எழுந்தருளியிருந்த வொரு ஸ்வாமி இந்த ஸ்தானத்தில் அபிஷிக்தராய் இரண்டு மூன்று வருஷங்கள் கைங்கரியம் நிர்வஹித்தார். தற்காலம் ஆஸ்தானமலங்கரித்து எழுந்தருளியிருக்கும் ஸ்வாமி உபயவேதாந்த ப்ரவர்த்தகராய் பரமஸாத்விகராய் நம்பெருமாள் கைங்கரியத்தில் மிக்க குதூஹலியாய் ஸேவைஸாதித்தருளா நின்ருர். * வையம்மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே * என்று ஆசாஸிக்கத்தகுந்த மஹாஸ்வாமி.

கோயிலுக்கு அடியேன் விடை கொண்டிருந்தது ஐம்பது பர்யாயங்களுக்கு மேலிருக்கும். அவ்விடம் சதாப்தி கடந்த பெரியார்களை [க்ருஹஸ்தஸ்வாமிகளை]க் கீழிதழ்களில் விஜ்ஞாபித்திருக்கிறேன். உபயவேதாந்த ப்ரவர்த்தகாசார்யர்களான ஸ்ரீமத் பத்தராவிஸ்வாமி, கோவிந்தாசார்யஸ்வாமி, மெய்யுமாசார்ய ஸ்வாமி, பஹுகுடும்பிஸ்வாமிகள் (ஸஹோதரர்கள்) அப்பனையங்கார் ஸ்வாமி, ஆழ்வாரையங்கார் ஸ்வாமி, கோயிலண்ணன் ஸ்வாமி, வாதூல ரங்காசார்ய ஸ்வாமி போல்வாரான மஹான்கள் இற்றைக்கு சதாப்தி கடந்த மஹநீயர்கள்— நித்யஸ்மரணீயர்கள்.

அடுத்த இதழில் திருமலை திருப்பதி மடாதிபதிகளான ஜீயர் ஸ்வாமிகளைப் பற்றி விஜ்ஞாபிக்கிறேன்: ... ... ... ... *

---

## த்ரமிடோபநிஷத் ப்ரபாவக்ரந்த வெளியீடு

எம்பெருமானருடைய திவ்யப்ரபந்த ப்ராவண்யத்தை எம்பார் அனந்தாழ்வான் முதலானருடைய ஸ்ரீஸூக்திகளாலும், ஸ்ரீபாஷ்ய, கீதாபாஷ்ய வேதார்த்த ஸங்க்ரஹ—கத்ய ஸூக்திகளாலும் விளக்கி அடியேன் எழுதியுள்ள நூல் இது— த்ரமிடோபநிஷத்ப்ரபாவமென்பது.

இதன் விலை ரூ. 2—00

கிடைக்குமிடம்:—க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்-3.

## கீதாசார்யன் மாதப் பத்திரிகை

திருவல்லிக்கேணியில் வாழூர் ஸ்ரீமான் M. A. வேங்கட க்ருஷ்ணன் M. A. என்பவர் என்னல் மேதாவி மணியென்று விருதளிக்கப்பெற்றவர். நேற்று விஜய தசமியன்று கீதாசார்யனென்னும் மாதப்பத்திரிகை வெளியிடத்தொடங்கியுள்ளார். 11—10—78 மாலை 5 மணி முதலாக 8 மணி வரை திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி யெம்பெருமான் ஸன்னிதியில் பல பெரியோர்கள் கூடி ஆரம்ப விழாவை வெகு சிறப்பாக நடத்தி வைத்தார்கள்.

அடுத்த இதழில் விரிவு காண்க — பத்திராதிபர்.

# சதாபிஷேக மஹோத்ஸவம்

கோயமுத்தூர் ஸ்ரீ உ. வே. ஸ்ரீவேதவ்யாஸ திருமலை பட்டாசார்ய ஸ்வாமியின் சதாபிஷேக மஹோத்ஸவம் கோவை சலிவன் வீதி பட்டர் திருமாளிகையில் உபயவேத பாராயணங்களுடன் சிறப்பாக நடைபெற்றது. 6—9—78 அன்று ஸ்ரீ உ. வே. சதாபிஷேகம் கோவிந்த நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி "பட்டர் வைபவம்" பற்றியும், 7—9—78 அன்று "ஸுதர்சனம்" ஆசிரியர் "ஸ்ரீரங்கராஜஸ்தவம்" பற்றியும், 8—9—78 சதாபிஷேகத்தன்று வாகம்ருதவர்ஷி ஸ்ரீ உ. வே. வரதாசார்யஸ்வாமி சதாபிஷேகம் கண்டருளும் ஸ்வாமியின் வைபவம் பற்றியும், 9—9—78 அன்று காரமடை ரங்கநாதன் ஸந்நிதியில் பட்டர் ஸ்வாமிக்கு நடந்த வரவேற்பில் ஸுதர்சனம் ஆசிரியர் "ஸ்ரீ கு ண ர த் ந கோ ச ம்" பற்றியும் உபந்யஸித்தனர். ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் ஸ்ரீ உ. வே. P. B. அண்ணங்கராசார்யஸ்வாமி பட்டர் ஸ்வாமி விஷயமாக அநுக்ரஹித்த பஞ்சரத்நமாலிகை பொழிப்புரையோடு ஸ்ரீவைஷ்ணவஸுதர்சந பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டுள்ளது. மூலம் மட்டும் இங்கு வெளியிடப்படுகிறது.

## பஞ்சரத்நமாலிகா

1 ஸ்ரீவேதவ்யாஸபட்டாரக குலஜலதே: கௌஸ்துபாபோவதீர்ண:
ஸ்ரீசைலாசார்யவர்ய: ஸகலசுபகுணம்போநிதி: ஸாத்விகாக்ர்ய:
சாந்தோ தாந்தோ நஸூயு: ஸ்வசரணகமலத்வந்தவ ஸேவாரதாநாம்
மந்த்ரம் மந்த்ரார்த்ததத்வம் ஸகலமுபநிசந் ஸர்வஸேவ்ய: ஸமநதே.

2 வாசாமகோசர மஹாகுண கூரநாத
ஸத்வம்சதுக்தநிதிசந்த்ரமஸோஸ்ய ஸூரே:
சிஷ்யௌகபாக்யவசதோத்ய சதாபிஷேக -
திவ்யோத்ஸவ: ப்ரசலதீதி மஹாந் ப்ரமோத:

3 அசீத்யப்தபூர்த்திர் யதா போபவீதி
ப்ரஸித்தப்ரபாவஸ்ய ஸூரேரமுஷ்ய,
ததைவ ப்ரபூயாத் சதாப்தீப்ரபூர்த்தி:
திகந்தேஷு ஜேஜேது கீர்த்திச்ச பத்ரா.

4 சடாரிர் முநீந்த்ரோ யதீந்த்ர: க்ருபாளு:
ததா ஸௌம்யஜாமாத்ரு யோகீந்த்ர முக்யா:
ஸதாசார்யவர்யா குணப்தேரமுஷ்ய
ப்ரசஸ்திம் ப்ரக்ருஷ்டாம் ஸம்ருத்திம் ஂதிசந்து.

5 ஸுபுத்ரபௌத்ரசிஷ்யவர்க்க ஸம்பதாம் ஸம்ருத்திபாக்
குருத்தமோ குணம்புதிர் விசுத்தகீர்த்தி. பூஷண:
ஸ ஏஷ திவ்யமங்களாட்ய ஸூரிரேவமேவ போ:
சகாஸ்து மாத்நசே ஜநே திசந் த்ருசம் ஸதா முதா

பத்ரம் கர்ணேபிரித்யாதிச்ரௌதவாக்யை ருதீரிதாம்
பத்ரஸந்ததிமச்சித்ராம் அச்நுவீத மஹாநஸௌ
இத்தம் வாதிபயங்கர வம்சீயாண்ணங்கரார்ய தாஸேந
வேதவ்யாஸ மஹாகுரு சதாபிஷேகோத்ஸவே ந்யவேதி முதா

இதி ஸ்ரீ ஸ்வாமிநாம் சிரந்தநமித்ரம் காஞ்சீ அண்ணங்கராசாரியர்

இப்படிக்கு, தி. அ. அக்காரக்கனி அனந்தாழ்வான்.

# பிராட்டியின் பெருமை.

பிராட்டியின் பெருமை என்கிற மகுடம் இருவகையான பொருளைத் தாங்கி நிற்கும். (1) திருமார்பைவிட்டுப் பிரியாத பெரியபிராட்டியாரென்கிற ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் பெருமை. (2) ஸீதாபிராட்டியின் பெருமை-என்பதாக. இருவகையையும் இங்கு விஜ்ஞாபிக்கிறேன் பெரியபிராட்டியார்க்கு ஸ்ரீ என்று திருநாமம். இச்சொல்லுக்கு ஆறு வகையான வ்யுத்பத்திகளை மேலோர் காட்டுகின்றனர். ஸம்க்ஷேபருசியாலே இங்கு நான்கு வ்யுத்பத்திகளை மட்டும் காட்டி விவரிக்கிறேன். 1 ஸ்ரீயதே (இதி ஸ்ரீ:.) 2 ச்ரயதே. 3 ச்ருணோதி. 4 ச்ராவயதி. என்று. இவற்றின் அர்த்தத்தை உள்ளபடி தெரிந்துகொண்டால் அதுவே ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் பெருமையைத் தெரிந்துகொண்டதாகும். முறையே விவரிக்கிறேன். [1ஸ்ரீயதே.] இதற்கு கர்மணி வ்யுத்பத்தியென்று பெயர்; மற்ற ஐந்தும் கர்த்தரி வ்யுத்பத்திகள். ஸ்ரீயதே யென்பதற்கு–ஸர்வேச்வரனைத் தவிர்த்து மற்றெல்லாராலும் ஸேவிக்கப் படுகிறவள் என்று பொருள். * ஈச்வரீம் ஸர்வபூதாநாம் * என்கிறபடியே ஸகல ப்ராணிகளுக்கும் தஞ்சமாயிருக்கையாலே இவளை எல்லாரும் ஸேவித்துத் தங்கள் ஸ்வரூபம் நிறம்பெறுகிறார்களென்கை. *லக்ஷ்மீ: புருஷகாரத்வே நிர்திஷ்டா பரமர்ஷிபி:, மமாபி ச மதம் ஹ்யேதத் நாந்யதா லக்ஷணம் பவேத்* என்கிற பகவச்சாஸ்த்ரவசனத்தின்படியே இவள் எம்பெருமான் பக்கலிலே புருஷகாரக்ருத்யம் செய்து அவரவர்களின் அபீஷ்டத்தை நிறைவேற்ற வல்லவளாகையாலும், இதில் வேறொருவர்க்கும் ஸாமர்த்தியமில்லாமையாலும் இதற்காகவே இவள் அனைவராலும் ஆச்ரயிக்கப்படுகிறாளென்க. ஸ்வாமி தேசிகன் சதுச்ச்லோகீ பாஷ்யத்தில் *அஸ்தி கர்மார்ஹபலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷணமநுக்ரஹே. * என்று காரிகையிட்டருளினார். இதன் கருத்தாவது, பலன் கொடுப்பவன் எம்பெருமான்; பிராட்டி செய்வதாவது, அவன் நிக்ரஹோந்முகனாயிருக்குமளவில் ஸதுபாயங்களாலே அந்த நிக்ரஹத்தைப் போக்குவள்; அவன் அநுக்ரஹோந்முகனாயிருக்கும்போது அதை மேன்மேலும் பெருகச் செய்வள் என்பதாம் இத்தகைய சக்திவிசேஷம் இவளுக்கிருப்பதனால் ஸர்வை: ஸ்ரீயதே என்றதாயிற்று.

2. இனி இரண்டாம் வ்யுத்பத்தி [ச்ரயதே.] அநவரதமும் எம்பெருமானைப் பற்றியிருக்கிறாளென்கை. எல்லாரும் இவளையாச்ரயித்து ஸ்வரூபம் நிறம்பெறுவதுபோல, இவள்தானும் அவனையாச்ரயித்து ஸ்வரூபம் நிறம்பெறவேண்டுகையாலே தன்னுடைய சேஷத்வத்திற்கு உசிதமாக அவனைத் தொழுகிறாளென்பது தவிர, மற்றொரு காரணமும் முக்கியமாக வுண்டு; *கர்மாநுபத்த பலதாந ரதஸ்ய பர்த்து:* (கோதாஸ்துதி-25) என்று தேசிகனருளிச் செய்தபடியே சேதநர்களின் அபராதங்களைப் பத்தும் பத்தாகக் கணக்கிட்டு தண்டிக்கவல்ல எம்பெருமானுடைய ஸ்வாதந்திரியத்தையும், காலதத்வமுள்ளதனையும் அநுபவித்தாலும் தீராத பாவங்களைப்பண்ணிவைக்கும் சேதநர்களின் அபராதபாஹுள்யத்தையுங் கண்டு ‘ எந்த ஸமயத்தில் எந்த சேதநன்வந்து நின்று என்ன அனர்த்தம் விளையுமோ!’ என்கிற பயத்தாலும் எம்பெருமானை ஒரு க்ஷணமும் விட்டு அகலாதே ஸதா ஸேவித்திருப்பள்.

[3. ச்ருணோதி.] அடியார்களின் விண்ணப்பங்களைத் திருச்செவிசாத்துகிறாளென்கை. எம்பெருமானார் சரணாகதிகத்யத்திலே *பகவந்நாராயணாபிமதாநுரூபேத்யாதி தொடங்கி * அகிலஜகந்மாதரம் அஸ்மந்மாதரம் அசரண்யசரண்யாம் அநந்யசரணச் சரணமஹம் ப்ரபத்யே* என்று சொல்லிப் பெரியபிராட்டியாரை சரணம் புகுந்தார். ஸர்வலோக சரண்யனான எனது நாதனிருக்க என்னை எதற்

காகச் சரணம்புகுகிறீர்? என்று பிராட்டி திருவுள்ளமாக, இப்போது அடியேன் தேவரீடத்தில் செய்தது புருஷகார ப்ரபத்தியென்று காட்டிக்கொண்டு * பார மார்த்திக பகவச்சரணாரவிந்த......* இத்யாதியாக அடுத்த சூர்ணிகையாரம்பித்து “பகவச்சரணாரவிந்த சரணாகதி: யதாவஸ்திதா அவிரதா அஸ்து மே.” என்று விண்ணப்பஞ்செய்தார். இதனால் என்னதேறுகிறது? எம்பெருமான் திருவருளால் ஸித்திக்கவேண்டிய பேற்றை அடுத்தபடியாக அவன் திருவடிவாரத்திலே பிரார்த் திக்கப் போகிறேன்; அந்தப்பேறு உம்முடைய புருஷகாரபலத்தினாலன்றி ப்ராப்த மாகாதென்று “ச்ரேயோ ந ஹ்யரவிந்தலோசநமந: காந்தாப்ரஸாதாத்ருதே” இத்யாதி ஸ்ரீஸூக்திகளால் உணருகிறேனாதலால், அதற்குறுப்பாக உம்மைத் தஞ்சமாகப் பற்றுகிறேனென்று விஜ்ஞாபித்தபடியாயிற்று. இங்ஙனே அவரவர்கள் பண்ணும் விண்ணப்பங்களை ச்ரத்தையோடு திருச்செவி சாத்துகிறாளென்பது * ச்ருணோதி யென்பதன் பொருளாயிற்று. [4 ச்ராவயதி.] பேறுதருபவன் எம்பெரு மானாகையாலே அவன் திருச்செவியிலே படுத்தியே காரியம் ஸாதிக்கவேண்டி யிருத்தலால் உசித ஸமயம்பார்த்து அவன் திருச்செவி சாத்தும்படி செய்வ ளென்கை. இப்படி பிராட்டி செய்தருள்வதுண்டென்பதை ஸ்வாமி கோதாஸ்துதி யில் *ஆர்த்ராபராதிநி ஜநேபி அபிரக்ஷணார்த்தம் ரங்கேச்வரஸ்ய ரமயா விநிவேத்யமாநே * என்பதனால் ஸ்பஷ்டமாகத் தெரிவித்தருளுகிறார் “ரமயா விநிவேத்ய மாநே” என்றது காண்க. பிராட்டி விநிவேதனம் செய்வது யாதெனில், கேண்மின்.

தயாளுவென்றும் க்ஷமாநிதியென்றும் பேர்பெற்ற பெருமான் குற்றவாளர்க ளான அஸ்மதாதிகளையும் காத்தருளக் குதூஹலமுடையவனே; அதனால் சில ஸமயங்களில் நம் குற்றங்களைக் கணிசியாமலே க்ஷமித்தோ போக்யமாகக் கொண்டோ அநுக்ரஹிப்பன்; மற்றுஞ்சில ஸமயங்களிலோவென்னில், குற்றங் களைக் கணக்கிட்டு நிக்ரஹிக்கவும் தண்டிக்கவும் புகுவன். அப்படிப்பட்ட ஸமயங் களில் *நித்யமஜ்ஞாதநிக்ரஹையாய் அநுக்ரஹமயியான பிராட்டி, நாதா! மணற் சோற்றிலே கல்லாராய்வதுண்டோ? குற்றமே வடிவெடுத்த இவர்கள் பக்கலிலே நற்றம் தேடுவதும் அஃதில்லையென்று கைவிடப்பார்ப்பதும் தகுதியோ? தீரக்கழிய அபராதங்கள் செய்தவர்களாயிருந்தாலும் அநுதாபங்கொண்டு கவிழ்தலையிட்டுத் திருவடிவாரத்திலே வந்து நிற்பவர்கள் திறத்திலும் தேவரீர் நிக்ரஹமே காட்டுவ தானால் க்ஷமை தயை வாத்ஸல்யம் முதலான குணங்களுக்கு இலக்குத்தான் ஏது? என்பள். அதற்குஎம்பெருமான் குற்றவாளரெல்லாரையும் க்ஷமித்துக்கொண்டே யிருந்தால் சாஸ்த்ரங்களுக்கு ஜலாஞ்ஜலிதானே? என்பன். அதற்குமேல் பிராட்டி என் வார்த்தையை ஆழ்ந்து பாராமலேக்ஷேபிப்பது யுக்தமா நாதா!;குற்றவாளர்க ளெல்லாரையுமா க்ஷமிக்கச் சொல்லுகிறேன் நான்? அநுதாபங்கொண்டு உன் திருவடிவாரம்வந்து சேர்ந்த குற்றவாளர்களையன்றோ நான் க்ஷமிக்கச் சொல்லு கிறது; அன்னவர் திறத்திலேயன்றோ நான் புருஷகாரம் செய்வது. குற்றங்களைச் செய்தும் அநுதாபலேசமுமின்றிக்கே விமுகர்களாகவேயிருப்பார் பல்லாயிர வருளரே; *க்ஷிபாமி, நக்ஷமாமிகளை அன்னவர் திறத்திலே தாராளமாகச் செய்ய லாமே என்பள். அதுகேட்ட எம்பெருமான் ‘நம்முடைய க்ஷமாதிகுணங்களுக்கும் தண்டதரத்வத்திற்கும் பொருத்தமாக இலக்குக்காட்டி இவள் வாதிப்பதனாலே நாம் வாய்திறக்க வழியில்லை’ என்று தணிந்திடுவன். இவ்விஷயத்தை நம்முடைய புன்சொற்களாலே யெழுதுவது கிடக்கட்டும்; மணவாளமாமுனிகளின் பொன் சொற்களைக் கேளீர்;—

“இச்சேதனனுடைய அபராதங்களைக் கணக்கிட்டு நீரிப்படி தள்ளிக் கதவடைத் தால் இவனுக்கு வேறொரு புகலுண்டோ? உமக்கு மிவனுக்கு முண்டான ஸம்பந்த விசேஷத்தைப்பார்த்தால்*உறவேல் நமக்கிங்கொழிக்க வொழியாதென்கிறபடியே குடநீர்வழித்தாலும் போகாததொன்றன்றோ? ஸ்வஸ்மானவிவனை லபிக்கை ஸ்வாமி

யான உம்முடைய பேருயன்றே விருப்பது,* *எதிர்சூழல் புக்குத்திரிகிற உமக்கு நான் சொல்லவேணுமோ? ரக்ஷணஸாபேக்ஷனாய் வந்தவிவனை ரக்ஷியாதபோது உம்முடைய ஸர்வ ரக்ஷகத்வம் விகலமாகாதே? ‘ அநாதிகாலம் நம்முடைய ஆஜ்ஞாதிலங்கனம் பண்ணி நம்முடைய சீற்றத்துக்கு இலக்காய்ப் போந்த விவனை அபராதோசித தண்டம் பண்ணுதே அத்தைப் பொறுத்து அங்கீகரித்தால் சாஸ்த்ர மர்யாதை குலையாதோ?’ என்றதன்றே திருவுள்ளத்திலோடுகிறது. இவனை ரக்ஷியாதே அபராதாநுகுணமாக நியமித்தால் உம்முடைய க்ருபாதிகுணங்கள் ஜீவிக்கும்படி என்? அவை ஜீவித்ததாவது இவனை ரக்ஷித்தாலன்றே ‘நியமியாதபோது சாஸ்த்ரம் ஜீவியாது; ரக்ஷியாதபோது க்ருபாதிகள் ஜீவியாது; என்செய்வோம்?’ என்று தளரவேண்டா; சாஸ்த்ரத்தை விமுகர் விஷயமாக்கி க்ருபாதிகளை அபிமுகர் விஷயமாக்கினுல் இரண்டும் ஜீவிக்கும். ஆனபின்பு இவனை ரக்ஷித்தருளீர் என்று உபதேசிப்பளாயிற்று.’’—இவை மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்திகள்.

(ச்ராவயதீதி ஸ்ரீ:) என்ற வ்யுத்பத்தியின் பொருளை இங்ஙனே விவரிப்பது தவிர மற்றொரு விதமாகவும் விவரிப்பது ஆசார்ய ஸம்மதம். ச்ராவயித்ருத்வம் உபதேச கர்த்ருத்வம் இரண்டும் பர்யாயமாதலால், பிராட்டி எம்பெருமானுக்குப் போலே சேதநனுக்கும் உபதேசிப்பதுண்டாகையாலே அதையுங் கொள்ளலாமிங்கு; சேதநனை நோக்கி ‘உன் அபராதத்தின் கனத்தைப் பார்த்தால் உனக்கு ஓரிடத்திலும் காலூன்றவிடமில்லை; ஈச்வரனுவான் நிரங்குச ஸ்வதந்த்ரனுகையாலே அபராதங்களைப் பத்தும்பத்தாகக் கணக்கிட்டு தண்டிக்கலாயிருக்கும், இவ்வனர்த்தத்தைத் தப்பவேண்டில் அவன் திருவடிகளிலே தலை சாய்க்கையொழிய வேறு வழியில்லை; ‘ அபராத பரிபூர்ணனுன வென்னை அவன் அங்கீகரிக்குமோ? தண்டியானுே?’ என்று அஞ்சவேண்டா. ஆபிமுக்ய மாத்ரத்திலே அகிலாபராதங்களையும் பொறுக்கைக்கும் போக்யமாகக் கொள்ளுகைக்குமீடான குணங்களால் புஷ்கலனென்று லோகப்ரஸித்தனுயிருப்பானொருவன்; ஆன பின்பு நீ சுகமே வாழ வேண்டியிருந்தாயாகில் அவனை யாச்ரயிக்கப்பார்’ என்று உபதேசிப்பளாயிற்று. சேதநனை நோக்கி இத்தகைய உபதேசம் விபவாவதாரங்களில் காணத்தகும்.

இனி, பிராட்டியின் பெருமையென்பதற்கு ஸீதா பிராட்டியின் பெருமையென்னும் பொருளைக் கொண்டு உபந்யஸிக்கிறேன். *காவ்யம் ராமாயணம் க்ருத்ஸ்நம் ஸீதாயாச் சரிதம் மஹத்* என்று மஹர்ஷிதானும் *ஸ்ரீமத் ராமாயணமபி பரம் ப்ராணிதி த்வச்சரித்ரே* என்று பட்டரும், ‘‘இதிஹாஸச்ரேஷ்டமான ஸ்ரீராமாயணத்தால் சிறையிருந்தவளேற்றஞ் சொல்லுகிறது’’ என்று பிள்ளை லோகாசார்யருமருளிச் செய்தபடியே ஸ்ரீராமாயணம் முழுவதுக்கும் ஸீதா பிராட்டியின் வைபவமே உயிராயிருக்கும். இதை அதிஸம்க்ஷிப்தமாக விஜ்ஞாபிக்கிறேன். ஸ்ரீராமாயணத்தில் ஸ்ரீராமனுல் வத முண்டவர்களையும் ரக்ஷணம் பெற்றவர்களையும் எண்ணிப் பார்க்குமளவில் -- பெருமாள் பிராட்டியோடு கூடியிருந்த காலத்தில் ரக்ஷணமேயொழிய யார்க்கும் வதம் நேர்ந்ததில்லை; பிராட்டி அருகேயில்லாத காலத்தில் ரக்ஷணம் கிடையாது. சிக்ஷணந்தானுள்ளது — என்று ஒரு வ்யாப்தி சொல்லிவிடமுடியும். வரிசையாகப் பார்ப்போம்; தாடகாதாடகேய வதம் நேர்ந்தபோது பிராட்டியின் பரிணயமேயாகவில்லை. பரசுராமன் தலையறுப்புண்ணும்படி செருக்கி வந்தான்; *பாலாநாம் மம புத்ராணும் அபயம் தாதுமர்ஹஸி* என்று சக்ரவர்த்தி நிலைகலங்கும்படி வந்தான்; அவன் பிராட்டி ஸந்நிதியாலே விபத்தில்லாமே மீண்டான். அயோத்யாகாண்டத்தில் * இவள் ஸந்நிதியாலே காகம் தலை பெற்றது ப்ரஸித்தம். ஆரண்ய காண்டத்தில் சூர்ப்பணகைக்கு தாடகைக்குப் போலே வதம் நேர்ந்திருக்கவேணும்; பிராட்டி அருகேயிருந்ததனுல் செவிமூக்கோடேபோயிற்று. ‘விராதவதமும் கரதூஷணுதிசதுர்தசஸஹஸ்ரராக்ஷஸ

வதமும் நடந்த காலத்திலே பிராட்டி அருகில் தானே யிருந்திருக்கிருள் ; எப்படி வகம் நடந்தது ?' என்று சிலர் கேட்பதுண்டு ; மாரீசவத காலத்தில் எப்படி பிராட்டி அருகேயில்லேயோ அப்படியேதான் விராதகரதூஷணுதிவத காலத்திலும் அருகேயில்லே என்கிறமருமமுணரவேண்டும். விராதவதகாலத்தில் பிராட்டி அருகே யில்லே ; பிராட்டியை ஓரிடத்தில் தனியே விட்டிட்டு விராதன் ராமலக்ஷ்மணர்களே வேறொரு வனத்திற் கொண்டுசெல்ல அங்கேதான் யுத்தம் நடந்து முடிந்தனன். பதினுலாயிரம் அரக்கர்கள் அடர்ந்து வந்தபோது பிராட்டிக்குத் திருமேனிக் காவலாக அப்பால் சென்றிருக்கும்படி லக்ஷ்மணனேப் பெருமாள் நியமித்தது (ஆர. 20 ஸர்க. சுலோ 4 ல்) வ்யக்தம். வதமெல்லாம் முடிந்த பிறகு *பர்த் தாரம் பரிஷஸ்வஜே* என்னும்படி பிராட்டி அணைக்க வந்ததைச் சொல்லுமிடத்து (30—37) *ஏதஸ்மிந்நந்தரே வீரோ லக்ஷ்மணஸ் ஸஹ ஸீதயா, கிரிதுர்க்காத் விநிஷ்க்ரம்ய ஸம்விவேசாச்ரமம் ஸுகீ* என்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கை யாலே பிராட்டியும் லக்ஷ்மணனும் கிரி துர்க்கத்தில் ஏகாந்த வாஸம் செய்து கொண்டிருந்தமை விளங்கிற்று. ஆகவேதான் இந்த கெட்டத்தில் பெருமாள் *அஸஹாயசூர!* என்று ரகுவீர கத்யத்தில் புகழப்பட்டார். இதற்குப் பிறகு நடந்த வாலிவதாதிகள் பிராட்டியின் அஸமக்ஷத்திலே நடந்தவை யென்பது பற்றிச் சொல்லவேணுமோ ; ஆகவே முன்னம் கூறின வ்யாப்தி வெற்றி பெற்றதாயிற்று.

இவ்வர்த்தத்தைக் கம்பர் வாலிவாக்காலே விளங்க வைத்தார் ; "கோவியல் தருமமுங்கள் குலத்துதித்தோர்கட் கெல்லாம், ஓவியத்தெழுத வொண்ணுவுரு வத்தாய்! உடைமையன்றே, ஆவியைச் சனகன் பெற்ற வன்னத்தை அமிழ்தின் வந்த, தேவியைப் பிரிந்த பின்னேத் திகைத்தனே போலுஞ் செய்கை." என்பதாக. இந்த கம்பர் பாசுரத்தைக் கேட்டு ரஸித்த அரசாணிபாலே வேங்கடாத்வரி லக்ஷ்மீ ஸஹஸ்ரத்தில் காருண்யஸ்தபகே (9.) "த்வய்யேவாயததே க்ருபா ரகுபதே:" என்கிற சுலோகத்தை யமைத்தார். ... ... ... *

## மணவாளமாமுனிகள் மஹோத்ஸவம்

நிகழும் ஐப்பசி மீ 9 வ (26—10—78) வியாழக்கிழமை முதலாக மணவாள மாமுனிகளின் திருநக்ஷத்ரோத்ஸவம் நடைபெற்று வருகிறது இம்மஹோத்ஸவம் திவ்ய தேசங்கள்தோறும் விபவம்பொலிய நடைபெற்ருலும், கச்சிமாநகரில் தேவப் பெருமாள் ஸன்னிதியில் நடைபெறும் பரிசு பரமவிலக்ஷணமானது. தினந்தோறும் காலே 11 மணி முதலாக இரவு 10 மணி வரையில் உத்ஸவ வைபவம் தொடர்ச்சி யாக நிகழும். முதலில் அலங்கார திருமஞ்சனம் உடனே அருளிச்செயல் ஸேவை தொடங்கி மாலே 4, 5 மணி வரையில் நடைபெற்றுத் தீர்த்தப்ரஸாத விநியோக கோஷ்டியாகும், உடனே தேவப்பெருமாளுடைய நித்ய நைமித்திகோத்ஸவாநு பவம். பிறகு 7 மணிக்கு மணவாள மாமுனிகள் ஸன்னிதி வாசல் கொட்டகைப் பந்தலில் பக்தியுலாத்தலும் ஊஞ்சலும் கண்டருளி, பிறகு திருவாய்மொழி ஸேவை, உபந்யாஸ கோஷ்டி, சாத்துமுறை தீர்த்தப்ரஸாத விநியோகங்களோடு தலேக்கட்டும். சாத்துமுறையன்று (திருமூல நன்னுளில்) தேவப்பெருமாள் ஸன்னிதி வீதியுத்ஸவம் கண்டருளி மாலே 8 மணியளவில் மணவாளமாமுனிகள் ஸன்னிதிக்கெழுந்தருளி நடைபெறும் விசேஷங்கள். பின் மாலேயளவும் அற்புத மாக அநுபவிக்கத்தக்கன. மறுநாள் இயற்பா ஆயிரமும் ஸேவித்து இரவு 10 மணிக்கு சாத்துமுறையாகும்.

— நித்ய ஸ்ரீர் நித்ய மங்களம். —

# சபரீமோக்ஷோபந்யாஸம்.

ரகுவீரகத்யத்தில் "......சபரீமோக்ஷஸாக்ஷிபூத!" என்று ஸ்வாமி யருளிச் செய்திருக்கையாலே சபரீமோக்ஷமென்று விஷய நிர்தேசம் பண்ணுவது பொருத்த முடையதே. ஆனால் ஸ்வாமி தாமே ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் "பகவதி பரத்வாஜே புக்திஸ் ததா சபரீகரே" என்று மிக வியப்புடன் அருளிச் செய்திருக் கையாலும், ஸ்ரீ ராமாயண நித்ய பாராயண முடிவில் மங்களாசாஸனமாக அநு ஸந்திக்கும் ச்லோகமாலிகையில் "ஸாதரம் சபரீதத்தபலமூலாபிலாஷிணே என் றிருக்கையாலும் சபரியைப் பற்றிப் பேசும்போது "சபரீஸபர்யா" என்று விஷய நிர்தேசம் பண்ணுவது பாங்கு. அடியேன் இங்கு இரண்டையும் அநுபவிக்கிறேன். பெருமாள் முன்னம் சபரியைப் பற்றித் தெரிந்துகொண்டது தநுகபந்தனுல். அவன் பெருமாளுக்குச் சில விஷயங்களை உள்ளவாறு தெரிவித்தபடியைச் சொல்லு மிடத்து * ஸ சாஸ்ய கதயாமாஸ சபரீம் தர்மசாரிணீம், ச்ரமணீம் தர்மநிபுணாம் அபிகச்சேதி ராகவம். * என்றது. இங்கு (தர்மசாரிணீம்) என்றும் (தர்மநிபுணாம்) என்றும் கூறியுள்ளது பற்றிப் பிறகு விமர்சிப்போம். (அபிகச்ச) என்று அவன் சொன்னதும், உடனே மஹர்ஷி வாக்கிலும் *ஸோப்யகச்சந் மஹாதேஜாச் சபரீம் சத்ருஸூதந:* என்று வந்திருப்பதும் முன்னம் குறிக்கொள்ளத்தக்கது. (ச்ரமணீம் அவேக்ஷஸ்வ) என்றோ (ச்ரமணீம் கடாக்ஷய) என்றோ கபந்தன் சொல்லியிருக் கலாம். மஹர்ஷியும் (சபரீம் ஆஸஸாத) என்றோ (சபரீம் உபஜகாம) என்றோ சொல்லியிருக்கலாம். (அபிகச்ச) என்று அவன் சொன்னதும், (அப்யகச்சத்) என்று இவர் சொன்னதும் விமர்சிக்கப்படவேண்டும். ஒரு தேவதாவிசேஷத்தில் செய்யும் வழிபாடுதன்னையே அபிகமனமென்று சொல்லுவது முறை. அந்தரங்க ப்ரதிபத்தியோடு செய்யும் அணுகுதல் அபிகமனமெனப்படும். அத்தகைய வழி பாட்டுக்குரிய விலக்ஷண வ்யக்திவிசேஷம் சபரியென்பவளென்று விளங்கிற்று. இங்கு (மஹாதேஜா:) என்றும் (சத்ருஸூதந:) என்றும் இரண்டு விசேஷணங்கள் பெருமாளுக்கிட்டது பாத பூரணார்த்தமன்று: ஸாபிப்ராயம். சபரியின் ஆச்ரமத் துக்கு எழுந்தருளும்போதே பெருமாளுடைய திருமுகமண்டலம் மிகவும் தேஜஸ்வி யாயிற்றென்கிறது (மஹாதேஜா:) என்பதனுல். சரம பர்வ நிஷ்டையைக் காணப் பெறுகிறோமென்கிற மகிழ்ச்சி முகத்திலே தெரியலாயிருந்தது, ப்ரதம பர்வ நிஷ்டர் களான பகவத் பக்தர்களைக் காண்பது அரிதன்று: சரம பர்வ நிஷ்டர்களெனப்படு கிற ஆசார்ய சுச்ரூஷா நிரதர்களையும் ஆசார்யாபிமாந பாத்ர பூதர்களையும் காண் பது பெருந்தவப் பயனன்றோ? ஆக இந்த ஸந்தோஷம் முகத்திலே பொலிய நின்றதனுல் (மஹாதேஜா:) என்றது. இதற்குமேல் (சத்ருஸூதந:) என்றது. அந்த சபரிக்கு ப்ராப்திப்ரதிபந்தகங்களாய்ச் சில விரோதிகளிருந்தனவாக அவளு டைய வாக்கில் நின்றுமே தெரியவருவதனுல் அந்த விரோதி நிரஸநத்தைத் தம்மு டைய கடாக்ஷ வீக்ஷணத்தினுல் செய்தருள ஸங்கல்பித்தார் பெருமாள் என்று தெரிவிக்கின்றது.

இதற்குமேல் * சபர்யா பூஜிதஸ் ஸம்யக் ராம:* என்றதில் சில ஆராய்ச்சிகள் செய்ய ப்ராப்தமாகிறது. பெருமாள் சபரியிடம் கலந்து பரிமாறினவிதம் ஸ்ரீராமா யணத்தில் விசேஷமாகச் சொல்லப்படாதிருந்தாலும் நம் ஆசாரியர்கள் இங்கு [illegible]தர ராமாயணத்தை உபஜீவித்திருப்பதாகத் தெரிகிறது. பரத்வாஜாச்ரம புக்தி யையும் சபர்யாச்ரம புக்தியையும் ஒரு நிகராகவன்றோ ஸ்வாமிதேசிகன் நிர்தேசிக் [illegible]. * பகவதி பரத்வாஜே புக்திஸ் ததா சபரீகரே * என்கிற ஸங்கல்பஸூர்யோ [illegible]லோகத்தை உபக்ரமத்திலேயே விஜ்ஞாபித்திருக்கிறேன். ஸ்ரீவசன பூஷ [illegible] (233) "பெருமாள் ஸ்ரீசபரி கையாலே அமுது செய்தருளினர்" என்ற

விடத்து வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள் ''ரகுகுலதிலகராய் ஆசார ப்ரதாநரான பெருமாள் *சபர்யா பூஜிதஸ் ஸம்யக் ராமோ தசரதாத்மஜ:* என்னும் படி, வேடுவிச்சியாய் வைத்தே குருசுச்ரூஷையிலே பழுத்து ஜ்ஞாநாதிகையாய்த் தன் நாவுக்கு இனிதாயிருந்த பலமூலாதிகளையெல்லாம் இங்குத்தைக்கென்று ஸஞ்சயித்துக்கொண்டு வரவு பார்த்திருந்த ஸ்ரீசபரி, தன் ஆதராநுகுணமாகத் தன் கையாலே அமுது செய்யப்பண்ண, அதிஸந்துஷ்டராய் அமுது செய்தருளினார்'' என்றருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்திகள் விசேஷித்து அநுஸந்திக்கத் தக்கவை இதில் ''தன் நாவுக்கு இனிதாயிருந்த'' என்கிற வார்த்தையை மணவாளமாமுனிகள் மூலப்ரமாணமொன்றின்றி அருளிச்செய்யார். *பூர்வே பூர்வேப்யோ வச ஏததூசு:* என்று வேதமோதின ப்ரபலப்ரமாணமிருந்தே தீரும். இதையநுஸரித்தே ப்ரஸித்தப்ரபாவரான கோவிந்த ராஜார்யரும் ''ராமஸ் ஸமாகமிஷ்யதீதி ஸ்வாதூநி பலாநி ஆஸ்வாத்யாஸ்வாத்ய பரீக்ஷ்ய நிக்ஷிப்தவதீ இதி ப்ரஸித்தி:'' என்றெழுதியுள்ளார். இப்பொருளெல்லாம் (ஸம்யக் பூஜித:) என்றதில் அடங்கியேயுள்ளதென்பர் பெரியோர். கீழே சரபங்கமுனிவர் அகஸ்த்ய முனிவர் முதலானோர் செய்தது ஸாமாந்யபூஜை; இதுவே பெருமாள் திருவுள்ளத்தால் ஸம்யக்பூஜை யென்னலாயிருந்தது.

தயாசதகத்திலே * நிஷாதாநாம் நேதா கபிகுலபதி: காபி சபரீ * என்று ஸ்ரீராமாவதாரத்தில் விசேஷாநுக்ரஹ பாத்ரபூதரான வ்யக்திகள் மூவரை யெடுக்கின்ற ஸ்வாமி குஹப்பெருமாளையும் சபரியையும் எடுத்திருக்கின்றார். இவ்விருவர்க்குமுள்ள வாசியைச் சிறிது ஆராய்வோம். குஹன் சில உணவுப்பொருள்களைக் கொணர்ந்து கொடுத்து இவற்றைத் திருவுள்ளம் பற்றியருளவேணுமென்று வேண்ட, 'எனக்கு வேண்டா: (அயோத்திக்கு இன்னும் திரும்பிப்போகாமல்) விடாய்த்திருக்கின்ற குதிரைகளுக்குக் கொடு' என்றார். மனிதர்களின் உணவு வேறு; மிருகங்களின் உணவு வேறு; புல்லையும் கொள்ளையுமா குஹன் பெருமாளுக்குக் கொடுக்கவந்தான். மதுபர்ககமன்றோ கொடுக்கவந்தது. அதைப் பெற்றுக் கொள்ளவில்லை. * ந ச வர்த்தே ப்ரதிச்ரஹே* என்று ஏதோ சொல்லிக் கழித்துவிட்டார். சபரி அந்த குஹனைவிட உயர்ந்த ஜாதியில் தோன்றினவளல்லள். அவன் சபரன், இவள் சபரி. சபரனிடம் மறுத்துவிட்டவர் சபரியிடம் மறுத்துக்கூறாமல் * அர்ச்சிதோஸ்மி த்வயா பக்த்யா * என்று சொல்லி உகந்து ஏற்றுக்கொண்டது ஏன்? இது ஆராயத்தக்கதன்றோ?

கீழே அடியேனெடுத்துக்காட்டின ஸ்ரீவசனபூஷண வியாக்கியான ஸ்ரீஸூக்தியில் ''குருசுச்ரூஷையிலேபழுத்து ஜ்ஞாநாதிகையாய்'' என்று மணவாளமாமுனிகளருளிச் செய்திருப்பது உயிரான வார்த்தை. சபரியிடம் மிகச்சிறந்ததொரு தருமம் குரு சுச்ரூஷையென்பதிருந்தது. இதை கபந்தன் பெருமாளுக்குத் தெரிவித்தனன். *ச்ரமணீ சபரீ நாம காகுத்ஸ்த ! சிரஜீவிநீ த்வாம் து தர்மே ஸ்திதா நித்யம் * என்றும்; *ச்ரமணீம் தர்மநிபுணாமபிகச்ச * என்றுமுள்ள கபந்தனது வார்த்தைகளில் தர்ம சப்தத்தினால் விவக்ஷிதம் குருசுச்ரூஷையேயன்றோ. பெருமாளும் சபரியைக் கண்டவுடனே க்ஷேமம் வினவுகையில் *கச்சித் தே குருசுச்ரூஷா ஸபலா சாருபாஷிணி!* என்று, உன்னுடைய குருசுச்ரூஷை நிறைவேறியதா? என்று கேட்டிருக்கிறார். சபரி பேசின பேச்சினினிமையைக்கொண்டும் இவள் குருசுச்ரூஷை பண்ணிப் பழுத்தவள் என்று பெருமாள் தாம் கண்டறிந்ததை [சாருபாஷிணி] என்ற விளியினால் விளக்கினர். அவளும் தான் குருசுச்ரூஷை செய்ததை *யாநஹம் பர்யசாரிஷம்* என்பதனால் தெரிவித்திருக்கிறாள். இத்தகைய உத்தம தருமம் குஹனிடத்திலில்லாமைபற்றியே அவன் தந்த வுணவுகளைத் திருவுள்ளம் பற்றவில்லை. ஆக, சபரீஸபர்யையின் ப்ரகாரமும் ஏற்றமும் விஜ்ஞாபிக்கப்பட்டதாயிற்று.

இனி அவள் மோக்ஷமடைந்ததுபற்றி விஜ்ஞாபிக்கிறேன். ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் பராசரபகவான் *முக்திம் கதாந்யா கோபகந்யகா* என்று சிந்தயந்தி யென்கிற ஆய்ப்பெண்ணின் முக்தி ப்ராப்தியைச் சொல்லுமிடத்து [க்ஷீணபுண்யசயா] என்றும் [விலீநாசேஷபாதகா] என்றும் ப்ராப்திப்ரதிபந்தகங்கள் கழிந்ததைக் கூறினர் அவள் தன் வாயினால் ப்ரதிபந்தகங்கள் கழிந்தமையைக் கூறவில்லை. மூச்சடங்கிப் போனவளாகையாலே ப்ராப்யனை கண்ணனையும் ஸேவிக்கப் பெற்றிலள். சபரி அங்ஙனன்றிக்கே *சக்ஷுஷா தவ ஸௌம்யேந பூதாஸ்மி ரகுநந்தந!* என்று பெருமானை ஸாக்ஷாத்கரித்து ஸம்போதித்து, தன்னுடைய ப்ரதிபந்தகங்கள் நிவ்ருத்தமானபடியை (தவ ஸௌம்யேந சக்ஷுஷா பூதாஸ்மியென்று) தன் வாய்விட்டுச் சொல்லி, இதோ மோக்ஷம் போகிறேனென்று சொல்லிக்கொண்டே போனாள். இங்கே ஒரு அருமையான சாஸ்த்ரார்த்தம் கேளீர். சபரி பெருமானை ஸாக்ஷாத் நாராயணனாக நன்கறிந்தவள் ; ராமா ! உன்னுடைய திருவடி வாரம் செல்லுகிறேன் ; உன்னுடைய லோகம் புகுகிறேன் என்னாமல் இங்கு நான் எந்த ஆசார்யர்களுக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்தேனோ அந்த ஆசார்யர்களின் திருவடிவாரம் சென்று சேருகிறேன்' என்று சொன்னாள். இதையுட்கொண்டே ஆளவந்தார் ஆசார்ய ஸ்துதியில் *அத்ர பரத்ர சாபி நித்யம் யதீயசரணௌ சரணம் மதீயம்* என்றருளிச்செய்தார். இதில் பரத்ரசாபி என்றதுகாண்க. ஸ்ரீசூர்ண பரிபாலனத்தில் "அடியேனுடைய தகப்பனார் (அல்லது தாயார்) ஆசாரியன் திருவடியடைந்தார்" என்று சொல்லுவதற்கும் பத்ரிகைகளில் எழுதுவதற்கும் சபரியே வழிகாட்டியென்றுஉணர்க. ப்ரஸங்காத் பாடப்பிறழ்வுபற்றின விண்ணப்பமொன்று கேண்மின். *சக்ஷுஷா தவ ஸௌம்யேநேத்யாதி ச்லோகத்தின் உத்தரார்த்தம் "கமிஷ்யாம்யக்ஷயாந் லோகாந் த்வத்ப்ரஸாதாத் அரிந்தம!" என்று பல பதிப்புகளிலும் மாறியிருக்கிறது. கோவிந்தராஜரும் மாறின பாடத்தையே வியாக்கியானித்திருப்பதாகக் காண்கிறது; இதுவும் பிறழ்வே அந்த கோவிந்தராஜர் " சபரீம் தர்மசாரிணீம்" என்றவிடத்து வியாக்கியானத்தில் "பாதமூலம் கமிஷ்யாமி யாநஹம் பர்யசாரிஷம் - இதி வக்ஷ்யமாணத்வாத்" என்றெழுதியிருப்பதைக்கண்டு தெளிக. ... ... ... *

# அறுதொழிலந்தணர் பெருமை யுபந்யாஸம்.

திருமங்கையாழ்வார் தமது மூன்றாவது திவ்யப்ரபந்தமான திருவெழுகூற்றிருக்கையில் " அறுதொழிலந்தணர் வணங்குந்தன்மையை " என்றருளிச் செய்கிறார். இஃது எம்பெருமானைத் துதிக்கும் வாக்கியங்களில் ஒன்று. அறுதொழிலந்தணரென்று ஷட்கர்ம நிரதர்களான பிராமணர்களைச் சொல்லி, அவர்களால் வணங்கப்படுபவன் எம்பெருமானென்று இதுவொரு தோத்திரமாக அமைந்தது. அறுதொழிலென்பதும் ஷட்கர்மமென்பதும் பரியாயம். அந்தணர்களுக்கு ஷட்கருமங்களாவன — அத்யயனம், அத்யாபனம், யஜநம், யாஜநம், தானம், ப்ரதிக்ரஹம் என்பவை. அத்யயனம்-வேதமோதுதல். அத்யாபனம்—வேதமோதுவித்தல், யஜனம்—வேள்வி செய்தல் (யாகம் செய்தல்:) யாஜநம்—யாகம் செய்வித்தல். தானம்-ஸத்பாத்திரங்களில் கொடுத்தல். ப்ரதிக்ரஹம்-ஸத்துக்கள் விரும்பிக் கொடுப்பவற்றைப் பெற்றுக்கொள்ளுதல். ஆக இவையாறும் ஷட்கருமங்கள் [அறுதொழில்கள்] எனப்படும். இவற்றுள் இக்காலத்து அந்தணர்களான நாம் தானம் செய்வதையும் ப்ரதிக்ரஹம் கொள்வதையும் வைத்துக் கொண்டிருக்கிறோமேயல்லது அத்யயந—அத்யாபன—யஜன-யாஜனங்களைக் கொண்டிருக்கிறோமாவென்று பார்த்தால் இல்லையென்றே சொல்லவேணும். ஆனாலும் " வேதேஷு பௌருஷம் ஸூக்தம்" என்றபடி வேதங்களில் புருஷஸூக்தம் சிறந்ததாகையாலே அதையாவது ஓதி

அத்யயனக்கடனை ஒருவாறு தீர்த்துக்கொள்கிறோம். ''யஜ — தேவபூஜாயாம்'' என்கிற தாதுவின்படி பகவதாராதனமே யஜ்ஞமாகையாலே நாமுண்பதை அவனுக்குக் கைகாட்டி இதனாலே யஜ்ஞக்கடனையும் தீர்த்திக்கொண்டோமாவோம். இவ்வளவு சிரமத்திற்கும் இடமில்லாதபடி பரமகாருணிகர்களான நம் பெரியோர்கள் ப்ராஹ்மண்யத்தை எங்ஙனே நிர்வசனம் பண்ணியுள்ளார்களென்னில்: ''ப்ராஹ்மண்யாம் ப்ராஹ்மணாத் ஜாதத்வம்-ப்ராஹ்மண்யம்'' என்றார்கள். ப்ராஹ்மண ஸ்த்ரீயினிடத்தில் ப்ராஹ்மணபுமானுக்கு உத்பந்நனாதல் ப்ராஹ்மண்யம் என்றபடி. 'என் தாயார் ப்ராஹ்மணி: என் தகப்பனார் ப்ராஹ்மணர்: அவர்களுக்குப் பிள்ளையாகப் பிறந்த நானும் ப்ராஹ்மணன்' என்று சொல்லிக்கொள்ளத் தட்டில்லையன்றோ. இதற்குமேல் அவர்களுக்கு எப்படி ப்ராஹ்மண்யம்? என்று கேட்டால் 'ப்ராஹ்மண்யாம் ப்ராஹ்மணாத் ஜாதத்வம்' என்கிறவிதனையே சொல்லிக்கொண்டுபோவது. போனால், மூலபுருஷரிடத்திலே யதார்த்தமான ப்ராஹ்மண்யம் தேறக் குறையில்லை. ஆனாலும், ''யஸ்ய வேதச் ச வேதீ ச விச்சித்யேதே த்ரிபூருஷம், ஸ வை துர்ப்ராஹ்மணோ ஜ்ஞேயஸ் ஸர்வகர்ம பஹிஷ்க்ருத:'' [யாவனொருவனுக்கு வேதமும் வேள்வியும் மூன்று தலைமுறை இல்லாதபடி விச்சின்னமாய் விடுகிறதோ, அவன் எந்த கருமத்திற்கும் அதிகாரியல்லாதபடி துர்ப்ராஹ்மணனென்று பழிக்கப்படுகிறான்.] என்று பிரமாணமிருப்பதால் நாம் வேத வேள்விகளை ஸர்வாத்மநா வஞ்சித்து விடலாகாது: யதாசக்தி இவற்றில் அந்வயித்தே ஆகவேண்டுமென்று விஜ்ஞாபிக்கிறேன். ஆழ்வார்கள் திவ்ய தேச வாஸிகளை வருணிக்கும்போது ''நல்ல வெந்தழல் மூன்று நால்வேதம் ஐவேள்வியோடாறங்கம் வல்லவந்தணர் மல்கிய நாங்கூர்'' என்றும், ''அங்காமறைந்து வேள்வி நால் வேதமருங்கலையின்று, எரி மூன்றும் செங்கையால்வளர்க்கும் துளக்கமில்மனத்தோர் திருக்கண்ணங்குடி'' என்றும், ''தெருள்கொள் நான்மறை வல்லவர் பலர் வாழ் சிரீவரமங்கலநகர்'' என்றும் அருளிச்செய்கிறார்கள். இக்காலத்திற்போல பாஷாந்தரப் படிப்பும் உத்யோகங்களும் வியாபாரங்களும் அக்காலத்தில் அந்தணர்களுக்கில்லாமையாலே வேதாத்யயனமும் அங்காத்யயனமும் கர்மானுஷ்டானமும் வீறுபெற்றிருந்தது. ... ... ... ... *

## வேதாத்யயனத்தின் அருமைபெருமைகளைப்பற்றி.

கீழ் அறுதொழிலுபந்யாஸத்தில் வேதப்ரஸ்தாவம் விசேஷமாக ப்ராப்தமானபடியால் வேதாத்யயனத்தின் அருமை பெருமைகளைப்பற்றிச் சிறிது விவரிக்க விரும்புகிறேன். அடியேனுக்குப் பரிசிதமான யஜுர் வேதத்தைப்பற்றியே விஜ்ஞாபிக்கிறேன். ''அஷ்டவர்ஷம் ப்ராஹ்மணமுபநயீத'' என்றபடி கர்ப்பாஷ்டமமாகிய ஏழாவது பிராயத்தில் உபநயனத்தைப்பண்ணி உபாகர்மமான பிறகு வேதமோதத் தொடங்கினால் ஆறேழு வருஷத்தில் க்ரமாந்தம் அத்யயனம் செய்து முடிக்கலாம். நாற்பத்து நான்கு பிரச்னங்கள் கொண்ட ஸப்தகாண்ட ஸம்ஹிதையும் முப்பத்தாறு பிரச்னங்கள் கொண்ட ப்ராஹ்மண பாகமுமாகிய எண்பது பிரச்னங்களை ஓதுவதென்று வைத்துக்கொண்டிருக்கிறார்கள். ஸப்தகாண்டங்களுக்கு ஸம்ஹிதையை மட்டும் ஓதினால் அதை தரிப்பதும் சிரமம். பகவத் கைங்கரியத்திற்கும் உதவாது. ஸம்ஹிதைக்கு மேல், பதம், க்ரமம், ஜடை, கனம் என்றிவை ஏற்பட்டிருக்கின்றன. இவற்றுள் ஜடையும் கனமும் ஸபாரஞ்ஜனமாகும். க்ரமந்தான் பகவத் கைங்கரியத்திற்குப் பெரும்பான்மையாக உதவுமது. க்ரமம் திடப்படுவதற்காகப் பதம் ஓதவேண்டியது அவசியமாகிறது. பலர் பதமோதாமல் ஸம்ஹிதையோடு க்ருதக்ருத்யர்களாய்விடுவதுண்டு. அன்னவர்களைப்பற்றி விநோதமாகச் சில இதிஹாஸங்களுண்டு. அவற்றுள் ஒன்றிரண்டு தெரிவிக்கிறேனிங்கு. தப

மோதாதவொருவர் சில வித்யார்த்திகளுக்கு ஸம்ஹிதையை ஓதுவிக்கத் தொடங்கினாராம். இரண்டாவது காண்டத்தில் ஆரும் ப்ரச்நத்தின் உபக்ரமம் "ஸமிதோ யஜதி வஸந்த மேவர்த்தூநாம்" என்பது. இதில் 'வஸந்தம் ஏவ ருதூநாம்' என்று பதபாடம். அவர் வெறும் ஸம்ஹிதையே ஓதினவராதலால் "ஸமிதோ யஜதி வஸந்தமே" என்றாராம். சிறந்த கனபாடியான பக்கத்து வீட்டுக்காரர் இதைக்கேட்டு அருகே வந்து (பதமோதாதபாவமே) என்றாராம். நாலாவது காண்டத்தில் ஐந்தாவது ப்ரச்னம் நமகம் என்று ப்ரஸித்தமானது. அதில் "த்ராபே அந்தஸஸ் பதே தரித்ரந் நீலலோஹித" என்று ஓர் அநுவாகம் தொடக்கம். இதில் (தரித்ரந் நீலலோஹித) என்றவிடத்தில் (தரித்ரத்) என்று பதபாடம். பதமோதாதவர்க்கு இது தெரியாததலால் அன்னவர் (தரிதரம்) என்று சந்தை சொன்னார். அதைக்கேட்ட கனபாடி 'அடா பதபாடதரித்ரமே!' என்றாராம். இங்ஙனே பல கதைகளுண்டு. பதபாடமோதாவிடில் பல பரிபவங்கள் நேரும். பதமோதிவிட்டால் க்ரமத்தில் அதிக ச்ரமம் ஏற்படாது. ஆனாலும் க்ரமத்தையும் ஒரு ஸம்வத்ஸரகாலமாவது குருமுகமாக அதிகரித்தேயாகவேண்டும். இதற்கு மேல் வர்ணக்ரமசிக்ஷையும் ப்ராதிசாக்க்யாதி லக்ஷண சிக்ஷையும் செய்யவேண்டியதுண்டு. "க்ரமாந்தம் நிரூடியாகச் சொல்லவல்லவர்கள்" என்று ப்ரக்க்யாதி பெற்றவர்களை இக்காலத்திலும் பெரும்பான்மையாகவே காண்கிறோம். வேத பாஷ்யங்களில் பரிச்ரமப்படுவாருமுளர். ப்ரஸங்காத் வேதபாஷ்யங்களில் சில விஷயங்கள் தெரிவிக்க விரும்புகிறோம் அது வேதத்தில் அதிக பரிச்ரமப்பட்டவர்களுக்கு மட்டுமே ருசிக்கும். இவ்வுபந்யாஸ மாலையில் இவ்விஷயம் சேர்க்கப்பட வேணுமா என்பதைப்பற்றிச் சிறிது ஆலோசித்தோம். இதுகாறும் நாம் எந்தெந்த விஷயங்களில் விரிவாக நூல்களியற்றி வெளியிட்டிருக்கிறோமோ, அந்தந்த விஷயங்கள் சுருக்கமாகவும் ஸாரமாகவும் இதில் தெரிவிக்கப்பட வேண்டுமென்னுமபிநிவேசத்தினால் அதையும் இங்குச் சில உபந்யாஸங்களாகச் சுருக்குகிறோம். வேதாதிகாரிகள் விமர்சிக்க ப்ராப்தமாகும், ... ... ...

## வேதபாஷ்யகாரர்களின் அநவதான விளக்கங்கள்.

கர்மகாண்டமென்றும் ப்ரஹ்மகாண்டமென்றும் பாகுபாடுற்ற வேதத்தில் ப்ரஹ்மகாண்டமாகிய உபநிஷத்துக்களுக்கு பாஷ்யமியற்றினவர்கள் கர்மகாண்டத்திற்கு பாஷ்யமியற்றவில்லை. அதற்கு பாஷ்யமியற்றினவர்கள் உபநிஷத்துக்களுக்கு பாஷ்யமியற்றவில்லை. தைத்திரீயோபநிஷத்தானது கர்மகாண்டத்தினுள்ளீடான ஆரண்யகத்தில் சேர்ந்திருப்பதனாலே இதற்கு பாஷ்யமியற்றுவது அவர்ஜநீயமாக ப்ராப்தமாயிற்று. இதனால் உபநிஷத் பாகத்திற்கு பாஷ்யமியற்றினதாக ஆகாது. அதை இயற்றினவர்கள் இதை ஏன் இயற்றவில்லை? என்று கேட்பதற்கு யாருக்கும் அதிகாரமில்லாமையாலே இக்கேள்வியை விட்டுவிடுவோம். இந்த பாஷ்யங்களைப் பற்றிச் சில விஷயங்கள் தெரிவிக்க விரும்புகிறோம். நமக்கு ப்ரவேசமுள்ளது யஜுர் வேதத்திலாகையாலே அதைக் கொள்ளுகிறோமிங்கு. கர்மகாண்டமானது அசீதியென்றும் அசீதித்வயமென்றும் வழங்கப்படுகிறது. அசீதியென்றால் எண்பது ப்ரச்னமென்றபடி. அசீதித்வயமென்றால் எண்பத்திரண்டு ப்ரச்நமென்றபடி. மந்த்ரப்ரச்நமிரண்டைச் சேர்க்காமல் அசீதியென்கிறது அதையும் சேர்த்து அசீதித்வயமென்கிறது. எட்டு ப்ரச்னமாகிய ஆரண்யகத்தை ஸ்ரீ வைஷ்ணவேதரர்கள் பத்து ப்ரச்நங்களாகக் கொள்ளுகையாலே மந்த்ரப்ரச்நத்தைத் தவிர்த்தே அசீதித்வயமென்பது அவர்களின் பக்ஷத்திலே பொருந்தும். இதில் இப்போது சர்ச்சை வேண்டா. கர்மகாண்டத்திற்கும் உபநிஷத் பாகத்திற்கும் ஒரு வாசியுண்டு; கர்மகாண்டத்தில் ப்ராஹ்மணம் தவிர மற்ற ஸம்ஹிதாபாகத்திற்குப் பதபாடம் அநாதியாக ஏற்பட்டிருக்கிறது. உபநிஷத் பாகத்திற்கு அது கிடையாது. ஸம்ஹிதைக்குப்

A

பதபாடம் மட்டுமேயன்று; க்ரமம் ஜடை கநம் இத்யாதிகளும் ஏற்பட்டிருக்கின்றன வென்றும் பிராதிசாக்க்யம் முதலானலக்ஷணங்களும் அமைந்திருக்கின்றனவென்றும் முன்னுப்ந்யாஸத்தில் தெரிவித்தோம். உபநிஷத் பாகத்திற்கு இவை எதுவும் கிடையாது. க்ரமம் ஜடை கநம் இவைகளுக்குத் தாயானது பதபாடம். அந்த பதபாடம் பௌருஷேயமா? அபௌருஷேயமா? என்கிற விசாரம் வைதிக கோஷ்டி களில் இருந்து வருகிறது. பௌருஷேயமென்று பலர் கொள்ளுகிறார்கள். நம் முடைய கொள்கை அங்ஙனமில்லை. நாம் எழுதுகிற நூல்களில் ''பதகாரபரப்ரஹ்ம'' என்றெழுதுவது வழக்கம். மூலத்திலேயே சில பல பாகங்களைப் பௌருஷேயங் களாகச் சொல்லுகிற வாதம் கிடக்கையில் பதபாடத்தைப்பற்றி என்ன விசாரம். புருஷப்ரணீதமென்றாலும் அந்த புருஷர் பரமபுருஷனோடு விகல்பிக்கத்தகுந்தவராக வேயிருப்பர் அவருடைய காலம் நம்முடைய புத்திக்கு எட்டாததேயாகும். இது நிற்க

மூலத்திற்கு பாஷ்யம் செய்பவர்கள் பதபாடத்தை அணுவளவும் அதிக்ரமியா மலே அதற்கிணங்கவே செய்தாக வேண்டுமென்பது ஸர்வஸம்ப்ரதிபந்நம். இதை யாரும் மறுக்ககில்லார் ஸ்ரீ ராமாயணாதிகளுக்கு வியாக்கியானம் செய்பவர்கள் ஸ்வேச்சயா பதவிபாகம் செய்து கொண்டு பொருளெழுதுவதைப் பார்க்கின்றோம். ஓரிரண்டிடமே காட்டுவோமிங்கு; '' **தேவநேநவநம் கத்வா** '' என்றவிடத்தில் தே. வநேந என்று பதச்சேதம் செய்து வியாக்கியானம் பண்ணுவதுபோல '**தேவநேந**, என்று ஒரே பதமாகக் கொண்டும் வியாக்கியானம் செய்யப்படுகிறது. காலால் நடந்து செல்லுகையைத்தேவநமென்பதாம்.''அஹம்தாவநமஹாராஜே பித்ருத்வம் நோபலக்ஷயே'' என்னுமிளைய பெருமாள் வாக்யத்தில் அஹம் தாவத், மஹாராஜே என்கிற பதவிபாகமிருக்கச் செய்தேயும் ''அஹந்தாவநமஹாராஜே'' என்று ஒரே பதமாக வைத்துப் பொருளுரைப் பாருமுளர். அஹந்தையையுடைய தசரத சக்ர வர்த்தி பக்கலிலே என்று பொருளாம். (அஹந்தையாவது–அஹங்காரம்.) பகவத் கீதையில் *ஸ யத்ப்ரமாணம் குருதே* என்றவிடத்தில் யத், ப்ரமாணம் என்று பதச்சேதம் பண்ணினர் சங்கராசாரியர். ஒரே பதமாகக் கொண்டார் ஸ்வாமி ராமா நுஜர். இங்ஙனே யெடுத்துக்காட்டக்கூடியவை அபரிமிதமாகவுண்டு இப்படி ஸ்வச்சந்தமாகப் பதவிபாகம் பண்ணி அர்த்த முரைப்பதை வேதம் ஸஹிக்குமதன்று. அசைக்கவொண்ணாதபடிபதபாடம் ஏற்பட்டிருப்பதனால்அதையநுஸரித்தே பாஷ்யம் இயற்றவேண்டியது கடமையாகும். நாலாவது காண்டத்தில் நாலாவது ப்ரச்நத்தில் [**ஸுவர்ஷாம்**] என்றொருபதம்; பதமோதாதவர்கள் இதை இரண்டு பத மாகக் கொள்ளாமற் போனாலும், **ஸுமித்ரா; ஸுபதா** இத்யாதிகளிற்போல சோபநார்த் தகமான (ஸு) சேந்திருப்பதாகவே கருதிவிடக்கூடும். ஆனால் பதபாடத்தில் 'ஸுவர்ஷாமிதி ஸுவ:–ஸாம்' என்று ஓதப்பட்டு வருகிறதென்பதைத் தெரிந்து கொண்டவர்கள் அங்ஙனம் கருதார்கள். ஆக, பதபாடம் அர்த்த நிர்ணயத்திற்குப் பரமோபகாரகமென்று தேறும்.

பதபாடம் போலவே ஸ்வரஸந்நிவேசமும் அர்த்த நிர்ணயத்திற்கு மிகவும் கைகொடுப்பதாகும். இதற்கும் சிறிது காட்டுகிறோம். தே என்பது ஓரெழுத்தான ஒரு பதம். இது தச்சப்தத்தில் ஸ்த்ரீலிங்க நபும்ஸகலிங்கங்களில் ப்ரதமா த்விதீயா விபக்திகளில் த்விவசநாந்தமாயும், பும்லிங்கத்தில் ப்ரதமாபஹுவசநாந்தமாயும் யுஷ்மச்சப்தத்தில் (துப்யம்) தே; (தவ) தே என்றுமுள்ளது. இத்தனை ரூபங்களும் வேதத்தில் அடிக்கடி ஓதப்படுகின்றன;இப்பதம் அநுதாத்தஸ்வரயுக்தமாயிருந்தால் யுஷ்மச்சப்த ரூபமென்று நிர்ணயிக்கப்பெறும். உதாத்த ஸ்வரயுக்தமாயிருந்தால் தச்சப்தரூபமென்று நிர்ணயிக்கப்பெறும். அதுதன்னிலும் த்விவசநரூபமும் பஹு வசநரூபமுமான வாசியுமிருப்பதால் பதபாடம் அதையும் விளக்கிக்கொண்டு தோன்றியிருக்கின்றது. த்விவசநரூபமான ஸ்தலங்களில் மட்டுமே (**தே இதி**) என்று

பதமோதப்படும். பஹுவசநரூபமாயிருந்தால் அங்கு இப்படி இருக்கவே மாட்டாது. ஆக இதில் உதாத்த ஸ்வரத்தைக்கொண்டு தச்சப்தரூபமென்றும், அநுதாத்த ஸ்வரத்தைக்கொண்டு யுஷ்மச்சப்த ரூபமென்றும் நிர்ணயிக்கலாகிறது.

**யத:** என்பது ஒருபதம். இதுவும் வேதத்தில் அடிக்கடி வரும். இதில் முதலெழுத்து உதாத்தமாக விருப்பது பலபல விடங்களில்; அது அநுதாத்தமா யிருப்பது சிற்சில விடங்களில். உதாத்தமாயிருந்தால் (யஸ்மாத்) என்று அர்த்த முள்ள அவ்யயமாகும். அநுதாத்தமாயிருந்தால் (யந்தம், யந்தௌ, யத:) என்று "இண்–கதௌ" என்கிற தாதுவில் சத்ர்ப்ரத்யயாந்தமாகத் தேறுகிற யச்சப்தத்தின் த்விதீயாபஹுவசநாந்தம் (ஸுவர்க்கம் லோகம் யத:) என வருமிடங்களில் ஸ்வர்க் கத்தையடைகின்றவர்களை என்று பொருள்படும். (**யத:**) என்கிறவிது பஞ்சமீஷஷ்டீ விபக்திகளில் ஏகவசநரூபமாகத் தேறுவதுமுண்டு. (**யதாம்**) என்று ஷஷ்டீபஹு வசநரூபமும் வேதத்தில் ஓதப்பட்டு வருகிறது. எனினும் (**யத:**) என்கிற பதம் ஸ்வரபேதத்தினுல் அர்த்தபேதத்தை யுடையதென்று காட்டுவது இங்கு முக்கியம். இங்ஙனே ஸ்வரவாசியினுல் பொருள்வாசியுளதென்பதற்கு எடுத்துக்காட்டக்கூடிய இடங்கள் ஓரிரண்டல்ல; அனேகமுண்டு. ஸ்தாலீபுலாகந்யாயேந ஸ்வல்பமே இங்கெடுத்துக்காட்டினேம்.

பதபாடத்தில் வேஷ்டநம் (அதாவது அவக்ரஹம்) என்பதுமொன்று. "ப்ரஜாபதிரிதி ப்ரஜா-பதி: நவோநவ இதி நவ:-நவ: சதமாநமிதி சத-மாநம் என்றிப்படி பிரித்தோதுவதுதான் வேஷ்டநமெனப்படுவது. ஒரு பதத்திற்கு ஓரிடத்தில் வேஷ்டநமோதப்படும்; அதே பதத்திற்கு மற்ருேரிடத்தில் அது ஓதப் படாது. '**வாஜயந்த:**' என்ருெரு பதம். இதற்கு ஓரிடத்தில் **வாஜயந்த இதி வாஜ—யந்த:** என்று வேஷ்டநமோதும். மற்ருேரிடத்தில் அது இல்லை. இதற்கு இப்பததில் ஸ்வர பேதம் நியாமகமாகும். எங்ஙனே யென்னில். **வாஜயந்த:** என்பதில் மூன்ருமெழுத்தான யகாரம் உதாத்தமாக வருவது சிலவிடங்களில்; அதுவே ஸ்வரிதமாக வருவது சிலவிடங்களில். உதாத்தமாக வருமிடங்களில் தான் வேஷ்டநமுண்டு. ஸ்வரிதமாக வருமிடங்களில் அது கிடையாது. இந்த ஸ்வரபேதத்திற்கும் அர்த்தபேதமேகாரணம். அர்த்தபேதமில்லாமல் அநாவச்ய கமாக ஸ்வரபேதம் வேதத்தில் காணப்படமாட்டாது. ஆக, வேதத்திற்குப் பொருள் காண வேண்டில் பதபாடத்தையும் ஸ்வரஸந்நிவே சங்களையும் உற்று நோக்கியே அவற்றுக்குப் பொருள்கண்டு உரைக்கவேணுமென்றும், பதபாடத்திற்கும் ஸ்வரப்ரக்ரியைக்கும் சேராதபடி உரைப்பது வேதார்த்தமன்று என்றும் மூதலிக் கப்பட்டதாயிற்று.

இனி, இப்போது அவதரித்திருக்கிற வேதபாஷ்யங்களின் பரிஸ்திதி எப்படிப்பட்டதென்று பார்ப்போம். பார்க்குமளவில் பதபாடத்திற்குப் பொருந் தாமலும் ஸ்வரப்ரக்ரியைக்குச் சேராமலுமே வேதபாஷ்யங்கள் அவதரித் திருக்கின்றன வென்று நாம் கண்ட பல விஷயங்களில் சில விஷயங்களை மட்டும் இங்கு நிரூபிக்கிறேம். இது வேத பாஷ்யகாரர்கள் மீது குற்றங்குறை கூறு மெண்ணத்தினுலன்று. தத்வ ஜிஜ்ஞாஸயா அத்தனை. நம்முடைய வேதத்திற்கு ஸாயணர் பட்டபாஸ்கரர் என்னுமிருவர் பாஷ்யமியற்றினவர்கள். பட்டபாஸ்கரர் முற்பட்டவரென்றும், ஸாயணர் பிற்பட்டவரென்றும், சொல்லுகிருர்கள். பட்டபாஸ்கர பாஷ்யம் மிகவும் ஸம்க்ஷிப்தமானது. ஸம்ஹிதையில் நாலாவது காண்டத்திற்கும் ப்ராஹ்மணத்தில் இரண்டாவது அஷ்டகத்திற்கும் பட்டபாஸ்கர பாஷ்யம் கிடைத்திலது. ஸாயணருடையது சிறிது விசதமான பாஷ்யமாகையாலே முன்னம் இதிலே நம்முடைய விவக்ஷிதங்களைத் தெரிவிக்கிறேம். பதபாடத்திற்குச் சேராத பாஷ்ய ஸ்தலங்களில் சிலவற்றை யெடுத்துக் காட்டுகிறேம். ஐந்தாவது

காண்டம் முதல் ப்ரச்நத்தின் முடிவில் "யாஹி ஸாத்யா ஹவிரதந்து தேவா:" என்றுள்ளது. இங்கு (ஸாத்யாஹவி:) என்றவிடத்தில் ஸாத்யா: என்று விஸர்க் காந்தமாகவும் பிரிக்கலாம்; ஸாத்யா என்று விஸர்க்கமின்றிக்கே ஆகாராந்தமாக வும் பதம் பிரிக்கலாம். ஆனால் பதம் பிரிப்பது நம்மிஷ்டமன்றே; அநாதியான பதபாடம் இங்கு எப்படியுள்ளதென்று பார்க்கவேணும். பார்க்குமளவில் (ஸாத்யா) என்று விஸர்க்கமின்றிக்கே ஆகாராந்தமாகவேயுள்ளது. (ஸாத்யா வை தேவா:) என்றுள்ள பிறவிடங்களிலெல்லாம் (ஸாத்யா:) என்று விஸர்க்காந்தமாகவே பத பாடமுள்ளது. அது தேவா: என்பதற்கு விசேஷணமாகிறது; அவ்விடங்களில் பூஜநீயாதேவா: என்று பொருளுரைத்திருப்பது பொருத்தமானதே. "ஸாத்யா ஹவிரதந்து தேவா:" என்றவிடத்திலும் அப்பொருளையே ஸாயணர் உரைத் திருப்பது பொருந்துவதற்கு வழியில்லை. விஸர்க்கமின்றிக்கே பதபாடம் வந்திருப் பதை அவர் அறிந்தும் ஆலோசித்துமிருந்தாராகில் இப்படியுரைத்திருக்கமாட்டார்.

இங்கு உண்மையான பொருளென்னவென்றால், பட்ட பாஸ்கரபாஷ்யத்தில் அஃது உரைக்கப்பட்டுள்ளது. (ஸாத்யா) என்பதை தேவர்களுக்கு விசேஷணமாக் காமல் கீழே "ஸ்வாஹாக்ருதேந ஹவிஷா" என்றவிடத்திலுள்ள ஹவிஸ்ஸுக்கு விசேஷணமாக்கி [ஸாத்யா ஹவிஷா–ஸாதிதேந ஹவிஷா] என்றுரைத்தனர் முன்னம். இது ஸ்வரஸமான அர்த்தமன்று என்று தாமே கருதி ஸாது என்னு மர்த்தத்தைப் பக்ஷாந்தரமாக வுரைத்தார். இதுதான் பொருத்தமான பொருள். அதே காண்டத்தில் மேலிரண்டாவது ப்ரச்நத்தின் முடிவில் ('ஸாதுயா') என வருகின்றது அது முழுப்பதம். அங்கு (ஸாது) என்பதுதான் அர்த்தம். அந்த பதமே ப்ரக்ருத விவாத ஸ்தலத்தில் உகாரலோபத்துடன் (ஸாத்யா) என்றாகி யிருக்கிறது- இதற்கு ஸாதிதேந என்கிற அர்த்தம் அவ்வளவு ஸ்வரஸமன்று; (ஸாது யதா ததா ஹவிரதந்து) என்னுமர்த்தமே மிகப்பொருத்தமானது. ஆனாலும் ஸாதிதேந என்கிற அர்த்தத்தில் பதபாட விரோதம் யாதும் சொல்லப்போகாது. ஸாயணர் உரைத்திருக்கிற பொருள் ஸர்வாத்மநா ஸங்கதமன்று என்பதை வைதி கர்கள் யாவரும் இசைவர்கள். இசைந்து தீரவேண்டியதேயாகும். ஸாத்யா: என்னவேண்டுமிடத்தில் (ஸாத்யா) என்று அவிஸர்க்க பதபாடம் வந்திருப்பதை சாந்தஸ வ்யத்யமாகக் கொண்டு பாஷ்யத்தைப் பொருந்த விடலாமென்று ஸஹஸா சிலர் சொல்லிவிடக்கூடும்; மூலத்தில் எத்தனை வ்யத்யயங்களிருந்தாலும் பதபாடத் தில் வ்யத்யயம் கிடையவே கிடையாதென்பதுபற்றி நம்முடைய விபுலநிரூபணம் வேதாத்யயநஸர்வஸ்வாதிகளில் வெற்றிபெற்றிருக்கின்றது என்னுமிவ்வளவையே இங்குச் சொல்லி நிற்போம்.

மற்றுமோரிடம் செல்வோம். நாலாவது காண்டத்தில் இரண்டாவது ப்ரச்நத்தில் "ஸஹஸ்ரியம் வாஜமத்யம் ந ஸப்திம் ஸஸவாந்" என்றுள்ளது. இங்கு (ஸஸவாந்) என்கிற பதத்திற்கு (ஸஸவாந் இதிஸ–ஸவாந்) என்று வேஷ்ட நமோதப்பட்டு வருகிறது. ஸாயணர் (ஸஸவாந ஸந்–தத்தவாந் ஸந்) என்று உரைத்திருக்கின்றார். இதற்கு இப்படி அர்த்தமிருந்தால் (ஸஸவாநிதி ஸ ஸவாந்) என்கிற வேஷ்டந பாடத்திற்கு அவகாசமிராது வைதிக வித்வான்கள் இதை மிகவும் விமர்சிக்கவேணும்.

மற்றுமோரிடஞ்செல்வோம்; இதே காண்டம் மூன்றாம் ப்ரச்னத்தின் முடிவில் "தே க்ரீடயோ துநயோ ப்ராஜத்ருஷ்டய:" என்றுள்ளது; இங்கு (ப்ராஜத் ருஷ்டய:) என்பதற்கு "ப்ராஜ:- தீப்தி:; வித்யுத்ரூபா த்ருஷ்டி: யேஷாம், தே ப்ராஜத்ருஷ்டய:" என்பதாக ஸாயணபாஷ்ய விவரணமுள்ளது. ப்ராஜபதத்திற் கும் த்ருஷ்டிபதத்திற்கும் ஸமாஸம் வந்திருப்பதாகக் கொண்டு இங்ஙனே பாஷ்யம் செய்தார். இது பதபாடத்திற்குச் சிறிதும்சேராது. (ப்ராஜத்ருஷ்டய இதி ப்ராஜுத்

ருஷ்டய:) என்றே பதபாடமுள்ளது. ப்ராஜமும் த்ருஷ்டியும் பாஷ்யகாரருக்கு எங்கிருந்து வந்து புகுந்தனவென்பது தெரியவில்லை. இதனை அச்சுப்பிழையாக யாரும் நினைக்கமுடியாது. இதையும் வைதிக வித்வான்கள் விசேஷித்து விமர்சிக்க வேணும்.

பிறிதோரிடத்திற்குச் செல்வோம். ('வாஜயந்த:') என்கிற பதத்தைப்பற்றி முன்னமே சிறிது ப்ரஸ்தாவம் செய்திருக்கிறோம். இதிலும் ஸாயணர் பிறழ்ந்திருப்பதை இங்கெடுத்துக் காட்டுகிறோம். முதல் காண்டத்தில் மூன்றாவது ப்ரச்நத்தின் முடிவான அநுவாகத்திலும், அதே காண்டத்தில் நாலாவது ப்ரச்நத்தின் முடிவான அநுவாகத்திலும் வாஜயந்த: என்கிற இப்பதம் வருகிறது. முந்தின இடத்தில் (*அச்யாம வாஜமபிவாஜயந்த:* என்னுமிடத்தில்)யகாரம்ஸ்வரித ஸ்வரமுடையது; இதற்கு வேஷ்டநம் கிடையாது. பிந்தினவிடத்தில் [*த்வயா வாஜம் வாஜயந்தோ ஜயேம* என்னுமிடத்தில்] யகாரம் உதாத்த ஸ்வரமுடையது. இதற்கு வேஷ்டந பாடமுண்டு. வாஜயந்த இதி வாஜ யந்த: என்று பதபாடம் ஜகத் ப்ரஸித்தமானது இதில் ஸ்வரபேதத்தை யாரும் அபலபிக்கமுடியாது. இதற்கு அர்த்தபேதம் இருந்தேதீரவேண்டும். ஆனால் அர்த்தபேதம் காட்டவேயில்லை. (வாஜம் அந்நம் ஆத்மந இச்சந்த:) என்கிற பொருளையே இரண்டிடத்திலும் ஸமரூபமாகச் செய்திருக்கிறார். இது பொருந்துவதற்கு வழியில்லை. பட்டபாஸ்கரரும் இரண்டிடத்திலும் ஏகரூபமான அர்த்தத்தை எழுதிவிட்டாரெனினும் அவர் சிறிது விழித்துக்கொண்டார். முந்தின இடத்தில் "ஸ்வராநவக்ரஹௌதுர்க்கடௌ" என்றொரு வாக்யமெழுதியிருப்பதைக் காணலாம்.

இதே பதம் நாலாவது காண்டத்திலும் இரண்டிடங்களில் வருகிறது. ஸ்வரபேதம் வேஷ்டநபேதம் என்பது அங்குமுள்ளது. அதில் இரண்டாம் ப்ரச்நத்தில் முடிவான அநுவாகத்தில் "ஸஹஸ்தமா ஸஹஸா வாஜயந்தா" என்றுள்ளது. வாஜயந்தா என்றது வாஜயந்தௌ என்றபடி. வசநபேதமொழிய வேறில்லை. இங்கு யகாரம் உதாத்த ஸ்வரயுக்தமாயிருக்கையாலே வேஷ்டநம் ஓதப்பட்டு வருகிறது. இதே காண்டத்தில் மேலே ஆறும் ப்ரச்நத்தில் *ஜீமூதஸ்யேவ* என்னுமநுவாகத்தில் (*ரதேபிஸ் ஸஹவாஜயந்த:*) என்றுள்ளது. இங்கு யகாரம் ஸ்வரித ஸ்வரயுக்தமாகையாலே ஏற்கெனவே நாம் காட்டியிருக்கிற நியமப்படிக்கு வேஷ்டநம் ஓதப்படுவதில்லை. இவ்விரண்டிடங்களிலும் ஸ்வரபேதத்திற்குச் சேர அர்த்தபேதம் இருந்தே தீரவேணும். இவ்விடங்களில் மட்டும் ஸாயணர் தமது பாஷ்யத்தில் அர்த்தபேதத்தைக் காட்டியிருக்கின்றார். இவை பொருத்தமான விவரணங்களேயாகும். முன்னே காட்டின முதல்காண்ட ஸ்தலங்களிலும் இப்படி வெவ்வேறு பொருளை விவரித்துக்காட்டவேண்டியிருந்தும் காட்டாதது ஏன்? என்று விமர்சிக்க ப்ராப்தமாகும்போது ஒரு மருமம் வெளியாகின்றது. (அதாவது) ஸாயனர் தாம் ஒருவரே வேதபாஷ்ய மியற்றவில்லையென்றும், விஜயநகரமஹாராஜ ஸந்நிதானத்தில் பல பல பண்டிதர்களை வரவழைத்து அவர்களுக்கெல்லாம் மாஸிகவேதன மேற்பாடு செய்வித்து, அவர்களுக்கு வேதத்தைப் பல பாகங்களாகப் பிரித்துக் கொடுத்து பாஷ்யங்களெழுதச் சொல்லி அவற்றை ஒன்று சேர்த்தாரென்றும் ப்ரஸித்தியுள்ளது. அது இவற்றால் மெய்ப்பிக்கப்படுகின்றது. இப்போது நாம் எடுத்துக்காட்டின ரீதியில் இன்னமும் பலபல காட்டக்கூடியவை யிருக்கின்றன.

பதபாடத்திற்கும் ஸ்வரஸந்நிவேசத்திற்கும் பொருந்தாதபடி பாஷ்யம்செய்துள்ள ப்ரகாரங்களை இதுவரையில் காட்டினோம். ஔசித்யவிருத்தமாகவும் பாஷ்யம் செய்திருக்கிறபடியைக் காட்டவேண்டியதுண்டு. இங்கு ஸங்க்ஷேபருசியாலே விட்டிட்டோம். வேதபாஷ்ய விமர்சநமென்கிற நமது வடமொழி நூலில் விரிவுகாண்க

இமவந்தந்தொடங்கியிருங்கடலளவும் ப்ரஸித்தமான பதபாடமுள்ள ஸம்ஹிதையின் பாஷ்யத்திலே இப்படிக் காட்டக்கூடிய விபரீதங்களிருக்கும்போது பதபாடம் அடியோடு அவதரிக்கப்பெருத வேதபாகங்களுக்கு எழுதப்படும் பாஷ்யம் எப்படியிருக்குமென்பதைப்பற்றி நாம் என்ன நினைக்கமுடியும்? மூன்ருவது அஷ்டகத்தைச் சேர்ந்ததான காடகத்தில் மூன்ருவது ப்ரச்நத்தில் *''ச்ரத்தயாதேவோ தேவத்வமச்நுதே''* என்கிற வாக்யம் ஸுப்ரஸித்தமானது. வேதமோதாதவர்களுங்கூடக் கையாளும் வாக்யமிது இதற்குப் பதபாடமில்லாமையாலே அவரவர்கள் இஷ்டப்படி பதம் பிரித்துக்கொள்வதை ஆக்ஷேபிப்பார் யாருமில்லை. ச்ரத்தயா, தேவ:, தேவத்வம், அச்நுதே என்று ஸாமாந்யர்கள் பதம் பிரித்துப் பொருள்கூறி வருகிருர்கள். உபயபாஷ்யகாரர்களும் இப்படியேதான் பதவிபாகம் கொண்டு பாஷ்யமிட்டிருக்கிருர்கள்.

இங்கு நாம் உணர்த்துவதைச் சிறந்த வைதிகர்கள் மிகுந்த ஊக்கத்துடன் விமர்சிக்கவேணும். வேதத்தில் ச்ரத்தயா என்கிற பதமும் தேவ: என்கிற பதமும் ஓரிடத்திலல்ல; பலவிடங்களில் ஓதப்பட்டு வருகின்றன. இவற்றின் ஸ்வரம் எங்கும் ஒரேவிதமாகத்தானுள்ளது. ச்ரத்தயா என்கிற பதத்தில் (யா) என்கிற மூன்ருமக்ஷரமானது எங்கும் ஸ்வரிதமேயொழிய ஓரிடத்திலும் உதாத்தமன்று. இதை ஸம்ஹிதையிலும் பார்க்கலாம், ப்ராஹ்மணத்திலும் பார்க்கலாம். ப்ரக்ருதமான *ச்ரத்தயா தேவ:* என்கிற வாக்யமுள்ள அநுவாகத்திற்கு அடுத்த அநுவாகத்திலேயே காணலாம். இப்பதம் உதாத்தாந்தமாக நிற்பது எங்குமே கிடையாது. இதற்கடுத்த (தேவ:) என்கிற பதத்தையுமெடுத்துக்கொள்வோம். இது வேதத்தில் இரண்டாயிரமிடங்களில் வருவது, எங்கும் முதலெழுத்து அநுதாத்தமாயும் இரண்டாமெழுத்து உதாத்தமாயுமேயிருக்கும்.

இப்படி நியதஸ்வரங்களான இவ்விரண்டு பதங்களையும் ப்ரக்ருத ஸ்தலத்தில் பாஷ்யகாரர்கள் விபரீதஸ்வரமாகக்கொண்டு அர்த்தம் செய்திருப்பது வேதபுருஷனுக்கு ஈஷத்தும் அபிமதமன்று. இங்கு அதேவ: என்பதே உண்மையான பதம். ஸ்வரிதாந்தமான ச்ரத்தயாபதமும் உதாத்தாதியான அதேவபதமும் ஸம்ஹிதமாம்போது இப்போது இங்கு உள்ள ஸ்வரஸந்நிவேசம் தன்னடையே வந்து நிற்கும். வேதமோதினவர்களுக்கு இப்படி நூருயிரமிடங்கள் நினைவுக்கு வரும். ஆக அதேவ: ச்ரத்தயா தேவத்வமச்நுதே என்றுதான் பாஷ்யம் செய்யவேணும்.

வைதிக வித்வான்களுக்கு விநயத்தோடு விஜ்ஞாபிப்பது. தைத்திரீய யஜுர் வேதத்திலும் அதன் இரண்டு பாஷ்யங்களிலும் உட்புகுந்து விசாரங்களைச்செய்ய நாம் ஐம்பதாண்டுகட்குமுன் முயன்ருேம். அப்போது வேதாத்யயந ஸர்வஸ்வமென்று ப்ரஸித்தமான நூலை இயற்றி வெளியிட்டோம். அதன்மீது வீணுகத் தோன்றிய மறுப்புரைகளையெல்லாம் எட்டு நூல்களினுல் களைந்தொழித்தோம். ஸுப்ரஸித்தர்களாயெழுந்தருளியிருந்த வித்வான்களின் மதிப்புரைகளையும் பெற்று ப்ரதிபக்ஷிகளை விச்ராந்தியடையச்செய்தோம். அந்தநூல்களெல்லாம் இன்றைக்கும் வித்வான்களினில்லங்களில் பெரும்பாலும் விளங்குகின்றன. அவற்றைக் காண விரும்புமவர்கள் 10 ரூ அனுப்பிப்பெறலாம். பிறகு இருபத்திரண்டாண்டுகட்கு முன்பு(15—4—56ல்) **பதபாடபரித்ராண**மென்கிற 58 பக்கங்கொண்ட ஸம்ஸ்க்ருத நூலை நமது வைதிகமநோஹரா என்னும் மாதப் பத்திரிகை மூலமாக வெளியிட்டோம். அதில் ஒன்பது ஆஹ்நிகங்கள் அமைக்கப்பட்டன. விரிவாகத் தெரிந்துக்கொள்ள விரும்புமவர்களுக்கு அந்த நூல் ஒன்று போதும். ... ... ... *

# தசாவதார ஸவபவம்.

நமக்குத் தலையான வேதாந்த சாஸ்த்ரமான சாரீரகமீமாம்ஸையில் (ப்ரஹ்ம ஸூத்ரத்தில்) சிலபல குறைகளிருப்பதாகக் கண்ட ஆழ்வார்கள் தங்களுடைய திவ்யப் பிரபந்தங்களிலே அக்குறைகளைத் தீர்த்தருளினார்கள். முக்கியமாக மூன்று குறைகளை இங்கெடுத்துக் காட்டுகிறேன். எம்பெருமான் திருவவதாரங்கள் செய்தருளுகிறானென்பதை அந்த மீமாம்ஸா சாஸ்த்ரம் சொல்லவில்லை. அவன் லக்ஷ்மீபதி யென்பதையும் சொல்லவில்லை அவன் நாராயண விஷ்ணு வாஸுதேவாதி சப்த வாச்யனென்பதையும் சொல்லவில்லை. இவற்றை நம் ஆழ்வார்கள் தமது திவ்யஸூக்திகளில் அடுத்தடுத்து அருளிச்செய்துள்ளார்கள். ப்ரக்ருத வியாஸத்தில் அவதாரமே விஷயமாதலால் இதைப்பற்றி விரிவாக விஜ்ஞாபிக்கிறேன். சங்கரபகவத்பாதாள் தமது கீதா பாஷ்யத்தில் கூறியபடி உண்மையில் எம்பெருமான் அவதாரம் செய்தருளாமையினால்தான் அதைப்பற்றி ப்ரஹ்மஸூத்ரகாரர் பேச முன்வரவில்லை யென்று சிலர் ஸஹஸா சொல்லிவிடுகிறார்கள். "வேதத்தில் அவதார ப்ரஸ்தாவம் கிடையாதாகையாலே சொல்லவில்லை" என்றும் கூறி விடுகிறார்கள் அந்தோ! வேதங்களையெல்லாம் பூர்த்தியாக ஓதினவர்கள் போல இங்ஙனே ஸாஹஸமாகக் கூறுகின்றனர். கேண்மின். வேதத்தில் பலவிடங்களில் அவதாரம் ஓதப்பட்டுள்ளது. மூன்றிடங்களை மட்டும் இங்கெடுத்துக் காட்டுகிறேன். **[அஜாயமாநோ பஹுதா விஜாயதே]** இது அந்தணர்களனைவருமறிந்த வேதவாக்கியம். எம்பெருமான் கர்மநிபந்தனமான பிறப்பில்லாதவனாயினும் கருணையினாலே பல அவதாரங்களைச் செய்தருளுகிறானென்று பொருள். மற்றொரு வேதவாக்கியம் **[ஸ உ ச்ரேயாந் பவதி ஜாயமாந:]** அப்பெருமான் பிறக்கப் பிறக்க சாணையிலிட்ட மாணிக்கம் போலே ஒளிமல்கப் பெறுகிறானென்பது பொருள். இதை யடியொற்றியே ஆழ்வார் திருவாய்மொழியில் * எளிவருமியல்வினன் நிலைவரம்பில பல பிறப்பாயொளிவரும் * என்றருளிச் செய்தார். இன்னொரு வேதவாக்கியம் **[பிதா புத்ரேண பித்ருமாந் யோநி யோநௌ]** * மகனொருவர்க்கல்லாத மாமேனி மாயனை அவன் தனக்குப் புத்ரப்ராயரானவர்களைப் பிதாவாகக்கொண்டு யோனிகள் தோறும் பிறக்கிறானென்கை. இந்த ச்ருதியை யுட்கொண்டே நம்மாழ்வார் திருவாய் திறந்தருளும் போதே * உயிரளிப்பானெந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாயிமையோர் தலைவா! * என்றருளிச் செய்தார். ஆக அவதாரங்கள் வேதத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்லப் பட்டுள்ளன வென்பது தேறிற்று.

கீதையில் நாலாமத்யாயத்திற்கு அவதாராத்யாயமென்றே பெயர். அதில் "**பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவ சார்ஜுந.** * என்று தொடங்கி அவதார **ஹேது ப்ரயோஜந** ப்ரகார காலாதிகளெல்லாம் விரிவாகச் சொல்லப்பட்டன. அங்கு "என்னுடைய ஜன்மங்கள் அஸங்க்யேயங்கள்" என்று நிற்கச் செய்தேயும் தசாவதாரங்களென்று ஒரு ப்ரஸித்தி வந்திருக்கின்றது. * பத்தினுடைய தோற்றமோடு * என்கிறார் திருமழிசைப்பிரான். * மீனாயாமையுமாய் நரசிங்கமுமாய்க் குறளாய்க் கானாரேனமுமாய்க் கற்கியாமின்னங் கார்வண்ணனே * என்கிறார் நம்மாழ்வார். * அன்னமுமீனுருவுமாளரியுங் குறளுமாமையுமானவனே ஆயர்கள் நாயகனே * என்கிறார் பெரியாழ்வார். * மீனோடாமை கேழலரி குறளாய் முன்னுமிராமனாய்த்தானாய்ப், பின்னுமிராமனாய்த் தாமோதரனாய்க் கற்கியுமானான் தன்னை * என்கிறார் திருமங்கையாழ்வார். கூரத்தாழ்வானும் பட்டரும் தங்கள் தங்கள் ஸ்தவங்களிலே தசாவதாரஸ்துதியை இயற்றுகிறார்கள். தேசிகனும் "தேவோ நச் சுபமாத நோது தசதா நிர்வர்த்தயந் பூமிகாம்" என்று தொடங்கி தசாவதார ஸ்தோத்ரமியற்றியுள்ளார். இவற்றுக்கெல்லாம் சிகரமாக மஹாபாரதத்தில் சாந்திபர்வணி மோக்ஷ தர்மத்திலிருந்து ஒரு அரிய பெரிய விஷயம் விஜ்ஞாபிக்கிறேன்.

அதில் முந்நூற்று முப்பத்தொன்பதாம் அத்யாயத்தில் நாரதமஹர்ஷி ச்வேதத்வீபத்தில் எம்பெருமானைக் கண்டு பல விஷயங்கள் கேட்டுத் தெரிந்து கொள்ளுகிறார். பவிஷ்யத்தான தசாவதாரங்களையும் சரித்திர வரலாற்றுடன் பகவான் தன் சோதிவாய் திறந்து பணிக்கக் கேட்டுணர்கின்றார். ''ச்ருணு நாரத! தத்வேந ப்ராதுர்ப்பாவாந் மஹாமுநே, மத்ஸ்ய: கூர்மோ வராஹச்ச நரஸிம்ஹச்ச வாமந:, ராமோ ராமச்ச ராமச்ச க்ருஷ்ண: கல்கீதி தே தச. பூர்வம் மீநோ பவிஷ்யாமீ......'' என்று தொடங்கி தசாவதார சரித்திரங்களை அநதிஸம்க்ஷேப விஸ்தரமாகக் கூறுகின்றார் பகவான்; அதைச் சிறிது விஜ்ஞாபயே.

(1) நான் முதலில் மீனமாக அவதரித்துப் பெரியகடலில் முழுகுகின்ற உலகங்களை வெளிப்படுத்திப் பிரஜைகளை நிலைநிறுத்துவேன். (2) ஹேமகூடபர்வதத்துக்கொப்பான கூர்மாவதாரஞ்செய்து அமிருதத்துக்காக மந்தரகிரியைத் தரிப்பேன். (3) பிறகு வராஹரூபத்தைத் தரித்துக்கொண்டு கடலில் மறைந்த பூமியை எல்லாப்பிராணிகளுடையவும் நன்மைக்காகத் தன்னிலையில்கொண்டு வந்து சேர்ப்பேன். அப்போது ஹிரண்யாக்ஷனென்கிற அஸுரனைக் கொல்லப் போகிறேன். (4) பிறகு நரஸிம்ஹாவதாரத்தையெடுத்து ஹிரண்யகசிபுவென்கிற அஸுரனையும் தேவகாரியத்துக்காகக் கொல்வேன் (5) பின்பு விரோசனனுடைய புத்திரனான பலியென்கிற பெரிய அஸுரன் உண்டாவான். அவன் இந்திரனையும் அவனது ராஜ்யத்திலிருந்து நழுவச்செய்வான். அவனால் மூவுலகமும் அபஹரிக்கப்பட்டு இந்திரனும் விலகியிருக்கும்பொழுது காச்யபரிடமிருந்து அதிதியினிடத்தில் பன்னிரண்டாவது புத்திரனாகப் பிறப்பேன் பிரமசாரியாகி யாகசாலையை அடைந்து உத்தமர்களான வேதியர்கள் துதிக்க அவனுடைய யாகத்தைத் துதிப்பேன். அதைக் கேட்டுப் பலியானவன் பிரீதியடைவான். பிறகு அவனிடம் மூன்றடி அளவுள்ளஸ்தலம் கொடுக்கவேண்டுமென்று யாசிப்பேன். அவன் மந்திரிகளால் தடுக்கப்பட்டும் என்னிடம் மிகவும் பிரீதியுடன் கொடுப்பான். பிறகு தானஜலமானது என்கையில் விழுந்தவுடன் மூன்று அடிகளுக்குள்ளடங்கிய ராஜ்யத்தை இந்திரனுக்கு அளிப்பேன். தேவர்களை அவரவர் அதிகாரங்களில் நிலைக்கச்செய்வேன். மஹாபலியைப் பாதாளத்தில் தள்ளுவேன். (6) திரேதாயுகத்தில் பரசுராமனாக அவதரிப்பேன். ஸேனைகளும் வாகனங்களும் நிறைந்த க்ஷத்ரிய ஜாதியை நாசம்செய்வேன். (7) திரேதாயுகத்துக்கும் த்வாபரயுகத்துக்கும் ஸந்தியாம்போது தசரதபுத்ரராமனாகிப் பூமண்டலாதிபதியாவேன். ஏகதரும் த்விதரும் த்ரிதருடைய சாபத்தால் தம் உருவமிழந்து வானரத் தன்மையை அடைவார். அந்தவம்சத்தில் பிறக்கும் வானரர்கள் எனக்குத் தேவகாரிய நிமித்தம் துணையாவர்கள். ராவணனைப் பரிவாரத்துடன் கொல்வேன். அவனுடைய ராஜ்யத்தைக் கிரமப்படி விபீஷணனுக்குக் கொடுப்பேன். நான் அயோத்தியில் வஸிக்கின்ற எல்லாரையும் அழிவற்ற லோகத்தை அடையச் செய்வேன். (8) த்வாபரயுகத்துக்கும் கலியுகத்துக்கும் ஸந்தியானது முடியும்பொழுது என்னுடைய அவதாரமானது மதுராபட்டணத்தில் உண்டாகும். நான் அந்த அவதாரத்தில் தேவகண்டகர்களான அநேகம் அஸுரர்களைக் கொன்று குசஸ்தலியென்கிற த்வாரகாநகரத்தை இருப்பிடமாகச் செய்வேன். அந்த நகரத்தில் வஸித்துக்கொண்டு, நரகன் முரன் முதலான அஸுரர்களைக் கொல்வேன். ப்ராக்ஜோதிஷ நகரத்திலுள்ள அஸுரர்களைக் கொன்று அதன் செல்வங்களைக் குசஸ்தலிக்குக் கொண்டுவருவேன். தவிரவும் ஓணானாகப் பிறந்த ந்ருகனென்பவனை சாபத்தினின்று விடுவிப்பேன். அந்த அவதாரத்தில் பேரனான அநிருத்தனுக்காகச் சோணிதபுரமென்கிற பாணாஸுரனுடைய நகரத்தையடைந்து பெரும்போர்புரிவேன். பாணாஸுரனுக்கு நன்மையைச் செய்வதில் பற்றுள்ள சிவனையும் ஸுப்ரமண்யனையும் ஜயிப்பேன். பிறகு பாணனை ஜயித்து உடனே ஸௌபமென்கிற

நகரத்தில் வஸிப்பவர்களெல்லாரையும்கொல்வேன். காலயவனனுடையவதமும் என்னாலேயே நடக்கும். கம்ஸனையும் கேசியையும் அரிஷ்டனையும் சாணூரனையும் முஷ்டிகனையும் ப்ரலம்பனையும் தேனுகனையும் கொல்வேன். யமுனையின் பெரிய மடுவில் காளியனை வசஞ்செய்வேன். கோகுலத்தில் இந்திரன் வர்ஷிக்க ஏழு ராத்திரி கோவர்த்தன மலையை அநாயாஸமாகத் தரிப்பேன். பிறகு மழை நின்ற பொழுது பர்வதத்தின் உச்சியிலிருந்து கொண்டு உடனே இந்திரனோடுகூட ஸம்வாதம்செய்வேன். பௌண்ட்ரக வாஸுதேவனையும் கொல்வேன். கிரிவ்ரஜத்தில் ஜராஸந்தனென்னும் அஸுரன் அரசனுவான். என்னுடையபுத்தியின் ஆலோசனையினால் அவனுடையவதம் உண்டாகும். தர்மபுத்ரருடைய யாகத்தில் சிசுபாலனைக் கொல்வேன். எனக்கு இந்திர புத்ரனான அர்ஜுனனொருவனே நல்லஸஹாயகனுவான். அப்பொழுது யுதிஷ்டிரரைத் தம்பிகளோடு அவருடைய ராஜ்யத்தில் ஸ்தாபிப்பேன். பூமியின் பாரத்தை இறக்கிவிட்டு ஆத்மஞானத்தை ஆச்ரயித்து துவாரகைக்கும் பிரளயத்தைச்செய்வேன். த்வாரகையை ஸமுத்ரத்தில் முழுகச் செய்வேன்.........இவ்வண்ணமாகக் கதை சென்றுகொண்டேயிருக்கிறது. எம்பெருமான் தானே சோதிவாய் திறந்து அருளிச்செய்த வரலாறுகளுக்கு மிகுந்த ஏற்றமுண்டல்லவா? தேசிகனருளிச்செய்த தசாவதார ஸ்தோத்திரத்திற்கு அடியேனெழுதி வெளியிட்டுள்ள **அவதாரரஹஸ்யரத்னப்ரபா** என்கிற மணிப்ரவாள வியாக்கியானத்தில் சரித்திரங்களை விரிவாக விளக்கியிருப்பது காணத்தக்கது. ... ... ... ... ... *

## — தேஹவைத்தியனும் ஆத்மவைத்தியனும் —

1. ''நோயற்றவாழ்வே குறைவற்ற செல்வம்'' என்றிருக்குமவர்கள் நோயற்ற வாழ்ச்சியின் பொருட்டு நித்தியமும் மருத்துவனுக்குக் கைகாட்ட வேண்டும். அவர் சொல்லுகிறபடியே நடந்துவரவேண்டும். அவர்க்குப் பணம் தரவேண்டும். நோய் உடலுக்குப் போலவே ஆன்மாவுக்குமுண்டு; ஆன்மாவும் நோயற்று வாழ வேண்டுமானால் இதற்காகவும் மருத்துவனை நாடவேண்டும்; உடல்மருத்துவன் பணம் பெற்றுக்கொண்டு பொய்ப் பித்தலாடகம் பேசி வஞ்சனைகள் செய்வான். உயிர்மருத்துவன் நம்மிடம் பணம் எதிர்பாராததோடு வேண்டும் ஸமயங்களில் நமக்குப் பணம் தருவன்; இந்த மருத்துவனுக்கு நாம் கைகாட்ட வேண்டாம். அவனுடைய கையை நாம் காணவேணும். ''அஞ்சேலென்று கைகவியாய்'' என்று வேண்டி அவனது அபயமுத்திரையோடு கூடிய திருக்கையை நாம் காணவேணும். மருத்துவன் சொல்லுகிறபடி நாம் கேட்டு அப்படியே நடந்து கொள்ளவேணுமென்பது இங்குமுண்டு. ஆனால் இந்த மருத்துவன் மனம் போன படியே புதிது புதிதாக ஏதும் சொல்லமாட்டான். வெகு நாளைக்கு முன்னமே தன் கட்டளைகளை கீதாதிகளிலே யெழுதிவைத்திருக்கிறன்; அதன்படி நாம் நடந்து கொள்ளவேண்டும். ... ... ... ... ...

## — உடல் மருந்துக்கும் உயிர் மருந்துக்குமுள்ளவாசி —

2. உடல் மருத்துவர்கள் ஒருவரிருவரல்லர்; பல்லாயிரவருளர். ஊர் தோறும் வீதிதோறும் பலபலருளர். உயிர் மருத்துவன் ஒருவனே. அவனைத்தான் * மருத்துவனாய் நின்ற மாமணிவண்ணா! * என்று பெரியாழ்வாரழைக்கிறார். * வைத்யோ நாராயணோ ஹரி: * என்று வைதிகர்கள் சொல்லுவர்கள். ஸஹஸ்ரநாமத்தில் (நிர்வாணம் பேஷஜம்)* பிஷக் * என்று பிஷக்காகச் சொல்லப்படுகிறன்.

உடல் மருத்துவன் மருந்தென்று ஒன்றைக் கொடுத்து அதற்காகவும் பணம் பிடுங்குவன். இந்த உயிர் மருத்துவன் தானே மருந்தாயுமிருப்பன். * மருந்தும் பொருளுமமுதமுந்தானே * என்கிருர் பேயாழ்வார். * நிர்வாணம் பேஷஜம் * என்கிறது ஸஹஸ்ரநாமம். * மருந்தே நங்கள் போக மகிழ்ச்சிக்கென்று பெருந் தேவர் குழாங்கள் திருநாட்டிலே பிதற்றிக்கொண்டிருப்பதாக நம்மாழ்வாரருளிச் செய்கிருர். திருநாட்டிலும் மருந்து வேண்டியிருக்கிறது. இதன் மருமத்தை த்வயத்தின் முடிவிலுள்ள நம: பதம்காட்டும்; அதைப்பெரியார்வாய்க் கேட்டுணர்க.

## — கைகால் முளைத்த மருந்தையே ஆழ்வார் தேடுகிருர் —

3. நம்மாழ்வார்நினைவு வந்தபடியாலே அவருடைய அற்புதமானவோர் அருளிச்செயல் நினைவுக்கு வருகிறது. உலகத்தில் நோயாளிகளை நோக்கி வினவு மவர்கள் ''யார் வைத்யர்? எதுமருந்து?'' என்றுகேட்பார்களேதவிர 'ஆர் மருந்து? என்று ஒருவரும் கேட்கமாட்டார்; கேட்பதில்லை. மருந்தென்கிற வஸ்து அசேதன மாகையாலே 'எது மருந்து?' என்றுதான் கேட்கக்கூடியது; அப்படித்தான் கேட்டு வருகிருர்கள். நம்மாழ்வாரோவெனில், திருவாய்மொழியில் (7—1—5) *ஆர்மருந்தினியாகுவார்? * என்கிருர். '' ஆர்மருத்துவராகுவார் '' என்ருராகில் பொருத்தமாயிருக்கும். ஆர்மருந்தாகுவாரென்றது விலக்ஷணப்ரயோகமாகவன்ரே வுள்ளது; ஆழ்வார் அசேதனமான மருந்தைக் கொள்பவரல்லர் என்பது இதனுல் விளங்கிற்றன்ரே. கைகால் முளைத்த மருந்துதான் உயிர்நோயைத் தீர்க்கும் மருந்தாகும். சுடராழி சங்கேந்தியிருக்கும் மருந்தையே நம்மாழ்வார் நாடுகிருர். நம்மாழ்வாரைச் சேர்ந்த நாமும் அதையே நாடுவோம். அந்தமருந்தின் பிரதி நிதிகள் ஆசாரியர்கள். * பீதகவாடைப்பிரானுர் பிரமகுருவாகிவந்து ஸேவை ஸாதிக்கின்றனர்.

## — பிறவியென்னும் நோய்க்கு மருந்தறிவாரில்லை —

4. நோய்கள் ஒருவகைப்பட்டிருக்கையன்றியே பலவகைப்பட்டிருப்பதை யறியாதாரில்லை. ஒவ்வொரு நோய்க்கும் மருத்துவர்கள் பலபலருளர். ஒரு நோய்க்கு ஒன்றுதான் மருந்து என்பதும் கிடையாது. சிரங்கு என்கிற ஒரு சிறு நோய்க்கு எத்தனை மருந்துகள் பார்த்து வருகிருேம்! பெரியாழ்வார் ஒரு நோயை யெடுத்துக் கூறி இதற்கு மருந்தறிந்தவன் ஒருவனேயுளன், வேறுயாருமிலர் என்கிருர் ஒரு பாசுரத்தில். அந்தப் பாசுரம் தெரியுமோ? * எருத்துக்கொடியுடை யானும் பிரமனுமிந்திரனும், மற்றுமொருத்தரும் இப்பிறவியென்னும் நோய்க்கு மருந்தறிவாருமில்லை * என்பதாம். சிவனும் பிரமனுமிந்திரனும் முதலான எந்தத் தெய்வமும் பிறவியாகிற நோய்க்கு [ஸம்ஸாரவியாதிக்கு] மருந்தறியமாட்டா தென்கிருர். பின்னை அறியுந்தெய்வம் ஒன்றுமில்லையோவென்ன, திருமாலிருஞ் சோலை மலையுறையுந் தெய்வமே மருந்தறியுந் தெய்வமென்று தலைக்கட்டினுர். மலைப் பிராந்தத்தில்தான் ஸித்தௌஷதங்கள் விளையுமென்று கூறுவர்கள். ஆகவே இந்த மருந்தும் மருத்துவனும் திருமாலிருஞ்சோலைமலையில்தானுள்ளதாகக் கண்டு பிடித்தனர் பெரியாழ்வார். மிகுந்த ஆபத்தென்று மருத்துவனிடம் ஓடிச்செல்லு மவர்கள் 'ஐயா! ஒன்றும் பயமில்லையா? உங்கள் வாயினுல் பயமில்லையென்று ஒரு சொல் சொல்லிவிட்டால் போதுமையா!' என்பர்கள். அப்படியே மருத்துவனுய் நின்ற இந்த மாமணி வண்ணனை நோக்கியே (அடுத்த பாசுரத்தில்) * அஞ்சே லென்று **கைகவியாய்** * என்று பிரார்த்திக்கிருர் பெரியாழ்வார். உண்மையில் இந்த மாமணிவண்ண மருத்துவன் அஞ்சேலென்று கைகவித்தால் ஏழேழ் பிறவிக்கும்

அஞ்சவேண்டியதில்லை. *போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொடு இறப்பிவை பேர்த்துப் பெருந்துன்பம் வேரறநீக்கித் தன்தாளின்கீழ்ச் சேர்த்து அவன் செய்யுஞ்சேமத்தை யெண்ணுவாரில்லையே! ... ... ... ... ...

## — மருந்தில்லாததொரு மஹாவியாதி —

5. ஸர்வஜ்ஞனை எம்பெருமானுங்கூட மருந்தறியப்பெறாத ஒரு வியாதி யுண்டு; அஃது இன்னதென்று தெரியுமா? எடுத்துக்காட்டினால்தான் தெரிந்து கொள்ளமுடியும் நாம் எடுத்துக்காட்டுவதற்குமுன்னே அவரவர்களே சிறிது ஆலோசித்துப்பார்த்துத் தெரிந்துகொள்க. நாமேயெடுத்துக்காட்டுகிறோம். வட மொழியில் அஸூயையென்றும் தென்மொழியில் பொறாமையென்றும் சொல்லப் படுவதொன்றுண்டே; இது மனிதர்களுக்கு மிகப்பெரிய வியாதி. உண்மையில் இதற்கு மருந்தே கிடையாது; உலகத்தில் அவரவர்களுக்குப் பெருமைகளை பகவான் அருள்செய்கிறான். குலத்தாற்பெருமை, தனத்தாற்பெருமை, அழகினாற் பெருமை, கல்வியினாற்பெருமை..........என்னும்படியான பெருமைகளை மனிதன் தன் முயற்சியினால் பெறமுடியாது; எம்பெருமானருள் ஒன்றினால்தான் பெற முடியும். இவை பெற்றவர்களைக் கண்டு நாம் உகக்கவேணுமேயல்லது பொறாமைப் பட்டுப் பயனில்லை. ஆனால் பொறாமைப்படுகிறோம். இது மருந்தில்லாத வியாதியே. இந்த வியாதி உண்டாகாமலே யிருந்தால் க்ஷேமம். உண்டாகி விட்டால் உயிருள்ளளவும் செத்துச் சுண்ணாம்பாக வேண்டியதே. ... ... *

## — வைத்யரை வேறு நகரந்தேடி யோடச்செய்த வைதிகர்கள் —

6. ஒருவர் டாக்டர் படிப்பு படித்து உயர்பதவியில் தேறினார். **L. M. P., M. B. B. S.,** முதலான பட்டங்களெல்லாவற்றுக்கும் மேலான பட்டம் பெற்றார், பிறகு செய்யவேண்டியதென்ன? ப்ராக்டிஸ் செய்து பொருளீட்ட வேண்டியது தானே. அதற்கு வழிதேடினார். ஸமீபத்தில் தனிகர்கள் வாழும்படியான ஒரு பெரிய அக்ரஹாரம் சென்று அங்கு ஒரு விடுதியில் தங்கி, தம்முடைய சிகித்ஸைத் திறமையை விளம்பரப்படுத்தினார். வீட்டு வாசலில் பெரிய போர்டு பலகைகள் மாட்டிவைத்தார். ''இவ்வூரில் பெரிய டாக்டர் இன்னார் வந்திருக்கிறார்; இன்ன தெருவில் இன்ன கதவிலக்கமுள்ள வீட்டில் தங்கியிருக்கிறார்'' என்று வீதிதோறும் பறை சாற்ற செய்தார். ஏழைகளுக்கு இலவசமாக சிகித்ஸை செய்வதாகவும் விளம்பரப்படுத்தினார். மாதம் இரண்டாயிற்று, ஒரு சிறு பையன கூட சிகித்ஸைக் கென்று வரவில்லை. அதனால் இவ்வூரில் வேறு டாக்டர்கள் இருக்கிறார்களோ வென்று அவர்க்கு ஐயமுண்டாயிற்று ஆங்காங்கு மூலை முடுக்குகளிற் சென்று விசாரிக்கச் செய்தார். வைத்தியரொருவரும் கிடையாதென்று திண்ணமாகத் தெரிந்துகொண்டார்; இவர்க்கோ மிக வியப்பு உண்டாயிற்று. இவ்வளவு பெரிய ஊரில் ஒருவர்க்காவது வயிற்றுவலி தலைவலி கூடவா வராமலிருக்கும்; டாக்டரை நாடாமலிருப்பது எப்படி ஸம்பாவிதமாகும்? என்று ஆச்சரியப்பட்டார். அக்கம் பக்கத்தில் சில வைத்தியர்கள் இருக்கக்கூடுமென்றும், அவர்களிடம் சென்று இவர் கள் சிகித்ஸைபெற்று வரக்கூடுமென்றும் எண்ணிப் பார்த்தார். அதைப்பற்றியும் விசாரணைசெய்து பார்த்ததில் இவ்வூருக்கு யோஜனை தூரத்தளவும் ஒரு வைத்தி யரும் கிடையாது' என்று தெரியவந்தது.

பிறகு இதன் மருமத்தைத் தெரிந்துகொள்ளவேண்டுமென்று ருசி பிறந்தது, தானே அவரவர்களின் வீடுகளிற் சென்று நான் ஒரு பெரிய டாக்டர்; இவ்வூரில் ப்ராக்டிஸ் பண்ணவந்துஇரண்டுமாதங்களுக்கு மேலாயிற்று; இதுவரை ஒருவர் கூட என்னிடம் ஒரு சிறிய சிகித்ஸைக்கும் வரவில்லையே, என்ன காரணம்? இவ்வளவு பெரியவூரில் ஒருவர்க்குமேயா நோய்நொடி வாராமலிருக்கும்? என்ன விஷயம்? என்று கேட்டார். அதற்கு எல்லோரும் ஏககண்டமாக ஒரேவிதமான பதில் சொன்னார்கள் (அதாவது) "டாக்டரே! இவ்வூரில் எங்களுக்கெல்லாம் ஒரு பெரிய குரு இருக்கிறார்; அவரிடத்தில் நாங்கள் உபதேசம் பெறுகிறவர்கள்; அவ்வுபதேசத்தின் படியே நடந்துகொண்டும் வருகிறோம்; அதனால் எங்களுக்கு ஒரு நோயும் வருவது கிடையாது. ஆகவே எங்களுக்கு சிகித்ஸாபேக்ஷையே நேருவதில்லை" என்றார்கள். இங்ஙனம் சொல்லக்கேட்ட டாக்டர் "அது எவ்விதமான உபதேசம்? நான் அதைத் தெரிந்துகொள்ளலாமோ?" என்ன; ஆகா, நன்றாகத் தெரிந்துகொள்ளலாமென்று கூறி அதைத் தெரிவித்தார்கள்; "தினமிரண்டு; வாரமிரண்டு; பக்ஷமிரண்டு; மாஸமிரண்டு; ருது இரண்டு; அயனமிரண்டு; வருஷமிரண்டு—இதுதான் உபதேசம்" என்றார்கள் டாக்டருக்கு இது சிறிதும் விளங்கவில்லை. பிறகு 'இந்த ஸூத்ரங்களை நீங்களே விவரிக்கவேணும்' என்று அவர்களை வேண்டிக்கொள்ள அவர்களே விவரித்தார்கள். (அதுமேலே வருமாறு—)

**தினமிரண்டு**=போஜனமென்பது, தோன்றினபோதெல்லாம் செய்யலாகாது. "ருதம் த்வா ஸத்யேந பரிஷிஞ்சாமீதி ஸாயம் பரிஷிஞ்சதி, ஸத்யம் த்வர்த்தேந பரிஷிஞ்சாமீதி ப்ராத:" என்று மந்த்ரமோதின இரண்டுவேளை மட்டுமே போஜனம் செய்யவேண்டும்; இடைப்பலகாரம், கடைப்பலகாரம் என்பது எதுவும் கூடாது. இதுதான் **தினமிரண்டு** என்றதன் கருத்து. போஜனமும் நித்திரையுமாகிற விரண்டும் வ்யவஸ்திதமாயிருக்கவேணு மென்பதையும் இதற்குக் கருத்தாகக் கொள்ளலாம். **வாரமிரண்டு**=வாரத்தில் இரண்டு நாளாவது ஆலயஞ்சென்று தொழுதுவரவேண்டும்; இதனால் தினப்படி சென்று தொழக்கூடா தென்பதில்லை. இரண்டுநாள் தவறவே கூடாதென்றபடி. **பக்ஷமிரண்டு**= இரண்டுவாரங் கூடினால் ஒரு பக்ஷமாகிறது. வாரந்தோறும் ஒரு அப்யஞ்ஜநம் [எண்ணெய் தேய்த்துக்கொள்வது] தவறலாகாதென்றபடி. **மாஸமிரண்டு**=இரண்டு பக்ஷங்கள் கூடினால் ஒரு மாஸமாகிறது; ஏகாதசி தோறும் உபவாஸம் தவறலாகாதென்றபடி. **ருது இரண்டு**=இரண்டு மாதங்கள் கூடினால் ஒரு ருதுவாகிறது; "மாஸி மாஸி க்ருஹஸ்தாநாம்" என்றபடி. மாதத்திற்கொருமுறை வபனம் செய்வித்துக்கொள்ள வேண்டு மென்றவாறு. இதுவும் தேஹாரோக்யத்திற்குச் சேர்ந்த காரியமேயன்றோ. **அயனமிரண்டு**=ஆறுமாதங்கள் சேர்ந்தால் ஓர் அயனமாகிறது மூன்று மாதங்களுக்கொருமுறை விரேசனங் கொள்ளவேணு மென்றபடி. **ஸம்வத்ஸரமிரண்டு**=சிலர் நித்யம் தேசாடனமே செய்துகொண்டிருப்பர். சிலர் ஒருநாளும் ஊரைவிட்டுக் கிளம்பாமலே யிருப்பர். இரண்டும் பிசகு. ஆறுமாதத்திற் கொருமுறை திவ்யதேச ஸேவையையோ சிஷ்யாநுக்ரஹத்தையோ வியாஜமாகக்கொண்டு சிலநாள் வெளி ஸஞ்சாரமும் செய்துவர வேண்டு மென்றபடி. ஆக இந்த நியமங்களை விரதமாகக் கொண்டிருப்பவர்களுக்கு நோய் நொடி வாராது; வைத்யாபேக்ஷையிராது என்றதாயிற்று. இந்த ஸதுபதேசம் அவ்வூரில் ஸபலமாயிருப்பதுகண்டு இங்கு நம்மால் ஜீவிக்க இயலாதென்று வெளியேறிவிட்டார் டாக்டர்; அவ்விடத்தில் விரைவில் மஹாதனிகராயினர். ... *

---